[Vol.XVII.] FEB & MAR. 1910. REGISTERED—M. 108 [No. 11-12.

லேசான காகிதப்பதிப்பு.
தனிப்பிரதி, 5½ அணா.
பழைய பிரதி, 6 ,,

சந்தா விலை விவரம்.
ஒரு வருஷத்துக்கு ரு. 4
6 மாதத்துக்கு ,, 2-2




அறிவைப பரவச் செய்வதற்கான மாதாந்தரத் தமிழ்ப் பத்திரிகை.

DEVOTED TO PRACTICAL TRUTH AND KNOWLEDGE

அறிவுடையாரெல்லாமுடையாரறிவிலர்
என்னுடையரேனுமிலர்.—திருக்குறள்.

A POPULAR NEW REVIEW & TAMIL MONTHLY
Estd. May, 1892.

கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்கவதற்குத்தக.—திருக்குறள்

ILLUSTRATING THE PRINCIPLES OF EDUCATION, PSYCHOLOGY, SOUL-CULTURE & ETHICS. ADAPTED FOR USE IN HOMES & SCHOOLS.

["Hitch Your Wagon to a Star."—Emerson."]

CONTENTS. PAGE



அட்டவணை. பக்கம்



["Our Theism is the Purification of the Human Mind"—Emerson."]

Thick Paper Edition for Patrons.) PUBLISHED BY (Minimum Subscription Rs. 5
**The Secretary, Diffusion of Knowledge Agency,**
*Lalitalaya, Mylapore, Madras, S.*
**For The Viveka Chintamani Publishing Committee.**

Thin Paper Edition for the People.) (Subscription Price: Yearly Rs. 4

*"Like a spider, like the earth, and like a living creature He produces the Universe."—Upanishad.*

# THE VIVEKA CHINTAMANI.

**Established 1892,**

**The Oldest and the Best Tamil Monthly: Yearly Rs. 4, Thick Paper Edition Rs. 5 in Advance.**

**Subscriptions registered by Volume only and cannot be discontinued in the middle of a Volume.**

LALITA LAYA, MYLAPORE,

**EDITOR**

**C. V. SWAMINATHA AIYAR.**

*Madras, S. March, 1910.*


# விவேகசிந்தாமணி.

வருஷசந்தா ரூ. 4, வாலியம் கணக்காகவே சந்தா பதிவுசெய்யப்படும்.

## விவேகசிந்தாமணிக் கமிட்டி விண்ணப்பம்

ஆரிய சகோதரர்களே, விவேகசிந்தாமணி, இனி மாதந்தோறும் ஒழுங்காக வெளி
யாகிவரும். ஸாதாரண்வருஷம் முதல் மிகவும் அருமையான விஷயங்களெல்லாம் வெளி
வரும். ஸித்தர்கள் ஸாதநாமுறை, யோகம், பக்தி, ஞானம் முதலான ஸாதநாமுறைகள்
வெளியிடப்படும். விவேகசிந்தாமணி யென்ற பெயர்க்கேற்றபடி இதில் விவேகத்தை விளை
க்கக்கூடிய அற்புத விஷயங்கள் நிறைந்திருக்கும். இக்காலத்துக்கேற்றபடி தேசாபிமானம்,
பாஷாஞானம், நீதிபோதம், வேதாந்தசாரம், சுதேச விதேச சரித்திரங்கள், மஹாத்
மாக்களின் அமிருத வசனங்கள், பகவான் அர்ச்சுனனுக்குப் போதித்த நித்தியானுகூல
ஸாதனங்கள், அப்போ தப்போது நடக்கும் விசேஷ ஸம்பவங்கள், ஆகிய இவைகள் அட
ங்கப்பெற்றுச் செந்தமிழ் நடையில் எழுதப்பட்டுத் தமிழ்நாடெல்லாம் ஜ்வலித்துவரும்.
இம்மாதாந்தப் பத்திரிகைக்கு ஒவ்வொருவரும் சந்தாதாரராகச்சேர்வதுடன் தங்கள் நே
சர்களுக்கும் காட்டி அவர்களையும் வாங்கும்படிசெய்து ஆதரித்துவரக்கோருகிறோம். மனி
தர்களுக்கு உய்யும்வழிகாட்டி அவர்களைக் கடைத்தேறச்செய்யும் உண்மையான ஸத்குரு
வைப்போலவிவேகசிந்தாமணியை வாசிப்பவர்களுக்கு அது உற்றவிடத்துதவியாய் நின்று
விவேகத்தைவளர்க்கும் குருவாய்த்தோற்று மென்பதிற் சிறிதும் சந்தேகமில்லை. பத்திரி
கையை முழுதும் படித்துக் கையொப்பக் காரர்களாய்ச் சேரவும், இதரர்களையும் அப்படி
யே சேரும்படி செய்யவும் கேட்டுக் கொள்கிறோம். இப்பத்திரிகை சென்ற பதினேழு
வருஷங்களாக இடையறாது நடைபெற்று வந்து, இடையே அச்சாபீஸார் செய்த தவறு
தலால் இடர்ப்பட்டு சஞ்சிகைகள் தவக்கப்பட்டாலும், அதனால் குற்றமின்றி பத்திரிகை
தொடர்பிடியாய் நடந்துவர ஏற்பாடாகி 17-வது வால்யம் 12-சஞ்சிகைகளும் சரியாக முடி
ந்துவிட்டன.

## 1910-ஷு ஏப்ரல் மீ முதல் 18-வது வால்யம் ஆரம்பம்.

விவேகசிந்தாமணிக்குச்சந்தாதாரர்களாகச்சேர விரும்புகிறவர்கள் அதன் ஒரு வரு
ஷசந்தா ரூபாய் நாலையும் முன்பணமாக, மைலாப்பூர், லலிதாலயம், அறிவைப்பரவச்செய்
யும் ஏஜன்ஸி காரியதரிசி சி. வி. ஸ்வாமிநாதய்யர் பேருக்கு அனுப்பி, அவரவர்கள் பேரை
ரிஜிஸ்தர் செய்துகொள்ளவேண்டும். முனபனமனுப்பாதவர்களுக்கு V. P. P. யில் ஒரு
வருஷ சந்தாவுக்குப் பத்திரிகை யனுப்பப்படும். 1909ஷு ஜூலை, ஆகஸ்டு, ஸெப்டெ
ம்பர் மாசங்களிற்கு சஞ்சிகை யில்லை: அவற்றிற்கு பதிலாக 1910-ம் வருஷம் மார்ச்சுமாசம்
வரையில் 17-வது வாலியம் நடந்து முடிந்துவிட்டது. 1910ஷு ஏப்ரல் மீ முதல் தமிழ்
ஸாதாரண வருஷத்தை யொட்டி புதுவாலியம் ஆரம்பிக்கப்படும்.

சி. வி. ஸ்வாமிநாதய்யர்,
பத்திராசிரியர்.

எம். கே. நாராயணஸ்வாமி ஐயர், பி. ஏ., பி. எல்.,
விவேகசிந்தாமணிக்கமிட்டி காரியதரிசி.

ஐயா,

## ORDER FORM.

Please enrol me as a Subscriber and send the Viveka chintamani by V. P. P. for a year's subscription, Viz Rs 4-1-0

எனக்குக்கிடைத்தமாதிரிக் காபியை வாசித்துப்பார்த்தேன். விவேகசிந்தாமணிக்கு என்னையும்
ஒரு சந்தாதாரராகச் சேர்த்துக்கொண்டு முதல் சஞ்சிகையை ஒரு வருஷ சந்தா ரூபா 4-1-க்கு **V. P. P.**
மூலமாக அனுப்பக்கோருகிறேன், தவறாமல் தபாலாபீஸில் பணம் கட்டிப் பெற்றுக்கொள்கிறேன்.

பேர் ______________________________

தொழில் ______________________________

ஊர் விலாசம் ______________________________

போஸ்ட் ______________________________

*"Give me not, O God, that blind, fool faith in my friend, that sees no evil where evil is, but give me, O God, that sublime belief, that seeing evil I yet have faith."*

*"Seek Truth wherever you find it," But "Make your choice and stick to it till you reach the End."*

ஸ்த்தியம் வத—**Speak the Truth**

"Hitch your wagon to a Star"                "To Thine Own Self be True."




*அன்பேயவன் : அறிவேசக்தி : ஓம் தத்சத்.*]                [God is Love: Knowledge is Power. *Aum.*

ஸத்யமே ஜெயம்—**Satyameva Jayati**.

பு. **17.**]    **1910**ஹு பிப்ரவரி-மார்ச்சு மீ, ஸௌமிய ஹு மாசி-பங்குனிமீ    [ச. **11-12.**

## To Our Readers and Subscribers.

We owe an apology to our Readers for the blunders committed by the Printer who was an untried hand. But better to deal with an ignoramus than get into the clutches of clever men without principle or scruples of conscience. In these days of voluble promises but rare fulfilment, we have, as we said, tried for once, the effect of 'Swadeshi Enterprise' on our constitution, with results, alas! better imagined than described. We are reverting, therefore, to our old humdrum life of "doing our duty" leaving the result in the hand of One, who in the Field of Battle at **Kurukshetra**, taught to the Hero of the Fight, Arjuna, the Great Secret of Karma, saying,—

**"To work you have the right, but not to the fruits thereof."**

We trust that our readers and Subscribers will not interpret this as meaning that they have no duty to perform, and we repeat that we expect them to do *their* duty and remit their arrears of subscription due **at once**.

We complete the 17th Volume with this number and we expect all arrears to be cleared before the Tamil New year comes round, with which the **18th Volume** will begin.

---

# FREEDOM—TRUE AND FALSE.

"A certain magnificent orator, who was going to Rome on a law suit, had called on Epictetus. The philosopher threw cold water on his visit, because he did not believe in his sincerety. "You will

get no more from me," he said "than you would get from any cobbler or greengrocer, for you have only come because it happened to be convenient and you will only criticise my style, not really wishing to learn *principles*." "Well, but," answered the orator, "if I attend to that sort of thing, I shall be a mere pauper like you, with no plate or equipage or land." "I don't want such things,', replied Epictetus; "and besides, you are poorer than I am, after all." "Why, how so?" "You have no constancy, no unanimity with nature, no freedom from perturbations. Patron or no patron, what care I? You do care. I am richer than you. I don't care what Cæsar thinks of me. I flatter no one. This is what I have instead of your silver and gold plate You have silver vessels, but earthenware reasons, principles, and appetites. My mind to me a kingdom is, and it furnishes me abundant and happy occupation in lieu of your restless idleness. All your possessions seem small to you, mine seem great to me. your desire is insatiate, mine is satisfied."

Does not Jesus Christ say the same thing in simple deep words? "What does it a man profit, if he gains the whole world and loses his own soul?"

### ஹிதோபதேசம்.

"செல்லுமளவின் செலுத்துமின் சிந்தையை
வல்லபரிசால் உரைமின்கள் வாய்மையை
இல்லையெனினும் பெரிதுளனெய்யறை
நல்லவரன்நெறிநாடுமின் நீரே."—திருமூலர்.

"இக்காயம்நீக்கி யினியொருகாயத்திற்
புக்குப்பிறவாமற் போம்வழிதேடுமின்
எக்காலத்திவ்வுடல் வந்தெமக்கானதென்ற்'
அக்காலம் உன்ன அருள்பெறலாமே."—திருமூலர்.

---

## முக்தி அல்லது ஸ்வதந்திரம் என்றால் என்ன?

"மோகமடங்கவேணும் மெய்யுருவங்காணவேணும்
"மெய்யுருவங்கண்டு அன்பு நிலையறியவேண்டும்
"அன்பு நிலையறிந்து அந்தரங்கமாகவேண்டும்
"அந்தரங்கமாய்விட்டால் அனுபவமே சித்திக்கும்;
"சித்திக்கும்மெய்சொன்னேன்சித்தங்கலங்காதே"
[ யென்றாள்.

—ஆனந்தத்தாய்மொழி

(மத்திமப்பருவம்—சித்திப்படலம்)

முக்தியென்றால் என்ன? அது வேதாந்த வெட்டிப் பேச்சு அல்ல. தனக்குள்ளே ஒன்றையெண்ணி யெண்ணி மனம் புண்ணாகி, புண்ணான மனதிலிருந்து ஒழுகும் சீயைப் புநிதமான அமிர்தமென்று எண்ணிக்களிக்கும் வீண் எண்ணமும் அல்ல. நாய் எலும்பைக் கடித்துப் பல்லசைந்து போக, தன் பல்லினின்றொழுகும் இரத்தத்தை எலும்பிலிருந்து வந்த ரஸமாக வெண்ணிக்களிப்பது ஒக்கும் முக்தியை பாவனமாத்திரமானதாக எண்ணிக்களிக்கும் மூடனுடைய களிப்பு. முக்தி அல்லது ஸ்வானுபவத்தை "வேதாந்த பாவனம்" என்று சொல்வது உண்மைக்கு விருத்தமாகும். அபக்குவர்களுக்கும் அநதிகாரிகளுக்கும் உண்மையுபதேசம் செய்யப் புகுந்தால், அவர்கள் மனமாயையின் மயக்கம் நீங்காதவராய் பாவனாதீதமான உண்மையை பாவனைப் படுத்தி, பாவனத்தை கவனம்பண்ணி, பிள்ளையார் பிடிக்கக் குரங்காய் முடிந்தகதை போல், பாவனாதீதமான உண்மையை பாவனமாத்திரமாக வெண்ணித் தாம் படுகுழியில் விழுவதன்றி வீண் அட்டஹாஸம் செய்துப்

பலரையும் அவ்வழியிலிழுத்துச் செல்லப் பார்ப்பார்கள். "குருடும் குருடும் குருட்டாட்டமாடிக் குழிவிழுந்தற்றே" யென்னும் திருமந்திரோபதேசத்துக்கு இவர்கள் இலக்கானவர்களாகிறார்கள். ஆனால் உண்மையை உள்ளபடி யுணர்வது தான் எப்படியோ? எனின், "உண்மையை உள்ளபடி யுணர ஒரே வழியுண்டு." அஃதென்ன வெனில், "ஸ்வானுபவமாம்"—அப்படி யென்றால், சொந்தத்தில் அனுபவித்தறிதலாம்.

"சொந்தத்தில் அனுபவித்தறிதல்" என்று சொன்னீரே, ஒருவனுக்கு சொந்தமானது எது? என்று கேட்பீரேல், அது தான் விசாரணை முகத்தால் அறியவேண்டியது. அந்த விசாரணையைச் செய்யும் வழி யென்னவெனில், அது குருமுகமாக அறியவேண்டியது. குருவைக் கண்டுபிடிப்பதெப்படி யென்றால், எம்பெருமான் திருமூலதேவர் சொல்கிறார் கேண்மின்:—

"இருவினைநேரொப்பிலின்னருட் சக்தி
குருவெனவந்து குணம்பல நீக்கித்
தருமென ஞானத்தால் தன்செயலற்றால்
திரிமலம் தீர்ந்து சிவனவனாமே."

"கம்பளிச்சட்டைக்கலாயசித்தர்" என்றொரு மஹான் இருந்தார். அவர் திருமந்திரத்துக்கு ஏதோ உரைசெய்திருக்கிறாரென்று கேள்வியுற்று அதைக் காணவேண்டி அவாவுற்றிருந்தோம். அவரைப்பற்றி நமக்குத் தெரிந்தது இவ்வளவே. மற்றப்படி அவரைப் பற்றிய கால, தேச, வர்த்தமானங்கள் ஒன்றுந் தெரியாது. எப்பொழுதோ தேஹவாசியாயிருந்து பூரணமெய்திப்போன ஒருவர் வாயுரையாகச் சொல்ல அதைக்கேட்டவர் ஏட்டுப்பிரதியாக எழுதிவைத்துக் கொண்டதை நாம் காணவேண்டுமென்று ஆசைப்பட்டால், அஃது நிறைவேறுவ தெப்படி? ஆசைப்பட்ட தென்னவோ உண்மை! உண்மையாசை யொருக்காலும் வீண் போகாது என்பது ஸத்தியமானதோர் தத்துவம். ஸத்தியமானதோர் தத்துவத்தைப் பற்றிநின்றால் அது ஏன் பலிக்காது போகும்! "ஆசையறுமின், ஆசையறுமின், ஈசனோடாயினும் ஆசையறுமின்" என்பதுபெரியோர் அனுசரித்துத் தேறினதோர் உச்சிதமான குருவாக்கு. "குருவாக்கு" என்றால் என்ன?

குருவாக்கு என்றாலும் பறைவாக்கு என்றாலும் ஒன்றே. அசரீரிவாக்கு என்று சொல்வது அஃதையே. சரீரமில்லாமல் வாக்கு என்னமாப் பிறக்கும்? பிறக்கும்! அது தான் ஸத்திய வாக்கு. அந்த வாக்குப் பொய்க்காது. மற்றதெல்லாம் பொய் வாக்குமூலத்தை யொக்கும். புளுகுண்ணிக்கோட்டையானுக்குப் பித்தலாட்டக்காரன் வக்கீல். இவர்களிருவரும் கக்ஷி கட்டினதற்கு செப்படி வித்தைக்காரன் சாக்ஷி. இவர்களைக் கொண்டு நியாயாதிபதி நியாயம் செலுத்த வேண்டும். சாத்தியமா, சாத்தியமில்லையா?

நியாயாதிபதி சரீரிமாத்திரமா யிருந்தால் சாத்தியமில்லை. அசரீரியாயிருந்தால் சாத்தியம்.

அப்படியென்றால் என்ன?

ஸ்தூலப் பார்வைமட்டு முள்ளவரானால் நியாயத்தைக் கண்டுபிடிக்க முடியாது! சூக்ஷ்மப்பார்வை யுள்ளவரானல் செப்படிவித்தைக்காரன் "திகு! திகு!"—"பார், பார்," என்னும் போது, அவன் முகத்தைப்பார்க்காமல் முகத்தில் விளங்கும் அகத்தைப் பார்க்கும்

சக்திவாய்ந்தவராயிருப்பார். அவர் இலகுவில் உண்மையைக் கண்டுபிடித்து நியாயம் செலுத்தத் தக்கவராவார். இப்படியே உண்மைத் தத்துவங்களைக் கண்டறிய வழியுண்டு. திருமூலதேவர்,—

"முகத்திற் கண் கொண்டு பார்க்கின்ற மூடர்காள்
அகத்திற் கண் கொண்டு பார்ப்பதே யானந்தம்"

என்று சொல்லி, சரீரி, அசரீரியைக்கண்டு பிடிப்பது எப்படி யென்று நீவிர் கேட்டது போல் "ஸ்வானுபவத்தைச் சொல்" என்ற மூடனை நோக்கி, மறுகேள்வி யொன்று கேட்கிறார். அது இது:—

"மகட்குத்தாய்தன் மணாளனோடாடிய
சுகத்தைச்சொல்லென்றாற சொல்லுமாறெங்ஙனே?"

அதுபோல சற்சிஷனாயிருந்து பக்குவமுதிர்ந்த காலத்தில் சற்குருவை யடைந்து, உண்மையுபதேசம் பெற்று, உபதேசநெறி நின்றொழுகிய காலத்து, உச்சமான உந்நத தசையில் குருவோடைக்கியமாகி, குரு-சிஷன் என்கிற பேதமற்று நின்ற நிலையிலுதிக்கும் "ஸ்வானுபவத்தை"ச் சொல் என்றால், "சொல்லுமாறெங்ஙனே?" ஆயினும் பரைவாக்கால் ஸ்வானுபவச் செல்வர்கள் சொல்லியதோர் உண்மையைச் சொல்கிறோம் கேண்மின்: தி

"முக்தியென்னப்படு மங்கையைச்சேரமுயல்பவருஞ்
சத்தியென்னப்படுமீசனருளன்றிச்சார்தலுண்டோ!"

"சத்தியென்னப் படுமீசனருள்" இல்லாவிட்டால் "முக்தி யென்னப்படும் மங்கையைச் சேரமுயல்பவர்" மூர்க்கரேயாவர். மூர்க்கருக்குண்டோ சக்தியும் முக்தியும்? "நாய் முச்சந்திப்பானை யறியுமா?" இப்படிப்பட்ட மூர்க்கர் சமயநெறிப்பட்டு முக்தியைச் சேரச் சக்தியை வேண்டிச் செய்யும் பூஜையும், முக்தியை "வேதாந்த எண்ணம்" என்று சொல்லிப் போதிப்போர் உபதேசமும் ஒருவகைப்பட்டதாகும்.

"சத்தியை வேண்டிச் சமயத்தோர் கள்ளுண்பர்
சத்தியழிந்தது தன்னை மறந்ததால்
சத்தி சிவஞானம்தன்னிற் தலைப்பட்டு
சத்தியஞானனந்தத்திற் சேர்சலே."-திருமூலர்.

இதெல்லாம் பரைவாக்கிலிருந்து பிறந்ததோர் ஒப்பிலா அசரீரிவாக்காம். சரீர பெந்தம்நீங்காதவர் என் வாக்கும் "அசரீரிவாக்கே" யென்று சொல்லிக்கொண்டு கிளம்புவது 'பொய்க்கூடையுட் புகுந்த மனிதன்" பூதமென்று அதையாட்ட, தொம்பைபோலும் அக்கூடையைப் பூதம் என்று நம்பி யொழுகுவார் புல்லறிவை யொக்கும். இது நிற்க.

கைலாய சித்தர் உரை எனக்குக்கிடைத்த அதிர்சயத்தை யுன்னில் அவர் உண்மையிற் சித்தரேயென்று விளங்குகிறது. நான் அவர் செய்த உரையை வாசித்தறிய வேண்டினேன். வேண்டின வேட்கை தீர்த்து ஆண்டவனடிமையாயிருந்து விளங்கின அவனைக், கயிலாயஸித்தர் என்று அறிந்து கொண்டேன். அவரில் நான் காணுதொழிந்த பாகம் "கம்பளிச் சட்டை"யென்று அவருடைய பெயருக்கு அடைமொழியாகக் கொடுத்திருக்கும் அத் திருவார்த்தையின் இலக்ஷியமே அது விளங்காமைக் குக் காரணம், பின்வரும் திருமந்திரத் தினுண்மை யுணர்ந்தோருக்குச் சொல்லாமல் தானே விளங்கும்.

"உற்று நின்றொாமெத்தகு சோதியை
சித்தர்களென்றும் தெரிந்தறிவாரில்லை."

"உணர்ச்சி யுளாங்கே யொடுங்கவல்லார்க்குக், குணர்ச்சியில்லாது குலாவியுலாவி, அ

ணைத்தணைத்தின்பம் அது விதுவாமே" யென்றோதிய திருமந்திரத்தின் திருஷ்டா நின்ற நிலைபெற்று அதில் "உற்று நின்றாரொடும்" ஒன்றாகி அபேதமாய் விளங்கும் "அத்தகு சோதியை"—செய்வது செய்யத் தகும் தகைமை வாய்ந்த அந்த சோதியாம் "இன்னருட் சக்தி"யைச் "சித்தர்களென்றும் தெரிந்தறிவாரில்லை. தெரிந்தறியும சக்திவாய்ந்த பின்,

"பத்திமையாலே பணிந்தடியார் தொழ
முத்திகொடுத்தவர் முன்பு நின்றானே."

உண்மைப் பக்தியின்றி "சக்தியென்னப்படும் ஈசனருள்" இல்லை. "சக்தி யென்னப்படும் ஈசனருளின்றி" "முக்தி யென்னப்படும் மங்கையைச் சேர முயல்பவரும்" இல்லை. வாச்சாவேதாந்தம் காய்ச்சுப் பழுக்காது. சிரத்தையின்றிப் பக்தி யில்லை: பக்தியின்றிச் சக்தி யில்லை: சக்தியின்றி நல்யோக மில்லை: யோகமின்றி ஞான மில்லை: ஞானமின்றி யோகஸித்தி யில்லை: யோகஸித்தியின்றி ஞானஸித்தி யில்லை- ஞானஸித்தியின்றி முக்தி யில்லை. முக்தியின்றி ஸ்வதந்திர மில்லை. கைலாயஸித்தர் உரைமுடிவில் "முடிவுரை" வரைந்திருப்பதில் இவ்வளவும் விளங்கப் * பரைவாக்கால் கூறப்பட்டிருக்கிறது. அதில்,

"திருமூலர் திருவுளம் பற்றின திருமந்திரத்துக்குப் பயனுள்ளபடியே கம்பிளிச்சட்டைக் கயிலாயச் சித்தர், சாதகரறிந்து ஆன்மலாபம் பெறும்படிக்கு, இட்ட திருமந்திரவுரை" என்று அவர் கூறிய வுரைக்கு விவரம் கூறியிருக்கிறது.

திருவே மூலமாயுதித்தவர், திருமூலர். இது எப்படி யென்றால், மூலன் என்னும் "மூலபுருஷன்" மாயா ஸம்பந்தத்தால் இடையனாகிப் பசுநிரைகளைமேய்த்து வருங்கால், அவன் தேஹவியோகமாக, அப்பசுநிரைகளாம் ஜீவகோடிகள் அவன் தேஹத்தை முகர்ந்து முகர்ந்து தேஹவாசனையில் ஜீவரக்ஷகனான அவனுடைய(கோபாலனுடைய) வாசனையின்றித் தவித்து நிற்க, ஜீவகாருண்யமே உருக்கொண்டது போலும்விளங்காநின்ற, சக்திவழிப்பட்ட "திருமூலர்" அவன் தேஹத்துட் புகுந்து பசுக்களின் துயரை யாற்றுவான் சங்கல்பிக்க,சங்கல்பமாத்திரத்தினாலே தேஹ வாஸியாகி, தனது திவ்யதேஹம் மறைந்து போகக்காணலுற்றார். பிறகு தான் புகுந்த சரீரத்திலிருந்தபடி அசரீரியாவான் தவமியற்றி,சரீரம் நழுவி அசரீரியான ஒவ்வொரு பொழுதும் அவர் திருவுளம் பற்றியதோர் உண்மையனுபவத்தைப் பரைவாக்கால் "திருமந்திரமாக" வெளியிட்டார். இந்த மந்திரத்துக்குப் பயன் சிதாகாசத்திலிருந்து வெளிவந்த பரைவாக்கு, மனாகாசத்திற் புகுந்து அங்கே, "சிருஷ்டி ஸ்திதி வியஸன கர்மகிருத்" என்ற சுருதிவாக்குப்படி முத்தொழிலியற்றித் திருக்கூத்து விளைப்பதாம். இத்திருக்கூத்துத் தரிசனத்தைச் "சாதகர்" உளவறிந்து காண்பதே அவர்கள் "அறிந்து ஆன்மலாபம் பெறுவதாம்". மந்திர திருஷ்டாவான "கம்பிளிச் சட்டைக் கயிலாயஸித்தர்" மந்திரத்தின் பயனும் திருக்கூத்து விளங்க, அதைச் "சாதகர் அறிந்து ஆத்மலாபம் பெறும்படிக்கு"(1) பரைவாக்கான சுத்த சப்தபிரம்மத்திலும் வேறலாத திருமந்திரத்துக்கு,(2) பச்யந்தி, (3) மத்திமை யென்னும் வாக்குகளால் "இட்ட உரை"யாம் "திருக்கூத்தாட்டம்" முற்றுப்பெற்றது என்பது அம்முடிவுரையின் இலக்ஷியார்த்தமாம்.

*(1) "பரை யென்னும் சூக்குமைவாக்கது சூன்யசம்பாஷணை."

(2) "பச்யந்தி வாக்கதுவோ அந்தி சந்தி மஞ்சள் வெயில்."

(3) "மத்திமை வாக்கதுவும் மனக் குரங்கு கட்டுடித்து மழலை பேசல். நாலாவதான "வைகரி வாக்கு" "விகாரமே" யெப்போதும்." என்பது சித்தர்வாக்கு.

இதற்கு "அறிவானந்த குரு" சாக்ஷியாதலால், "சாக்ஷிக்காரன் காலில் விழுவதிலும் சண்டைக்காரன் காலில் விழலாம்" என்கிற உலகவழக்கமான பழமொழிக்கு நேர்விருத்தமாய், "சண்டைக்காரன்" கொட்டமடங்க, "சாக்ஷிக்காரன்"காலில் விழுந்து "அறிவானந்தகுருபாதமேகதி"யென்ற சாதகன்சொல்லுக்கிலக்காய், "அறிவழிந்த அறிவே" ஆனந்தமய் விளங்கும் "சுககன"மான "குரு"வாம் "ஆனந்தத்தாயின்" "பாதமே கெதி" யாய்ப் பசுபாச மொழித்துப் பதியை யடைந்து சதியைப் பூஜித்து நிற்கிறோம்: இப்படிப் பதியை யடைந்து பின் சதிபூஜைசெய்யும் அவஸரம் எதுவோ அதுவே "ஸ்வதந்திரம்."

எல்லாத்தந்திரங்கள், ஆகமங்களிலும் "ஸ்வதந்திரமாம்" இதுவே தலையாய் விளங்குவதால், இந்தத்தந்திரத்தில் அடங்கிய ஆகமவுண்மைகளை ஸ்வானுபவத்தால் அனுஷ்டித்து வருவதற்கான சாதகசாதனங்கள்எதுவோ அதுவே "ஸ்வாதந்தரீயம்."

இப்படியாக உண்மை முக்தி யின்னதென்றும், உண்மைச் சுதந்திரம் இன்னதென்றும் விளக்கியபின், பொய் முக்தியையும் பொய்ச் சுதந்திரத்தையும் பற்றி அதிகமாய்ச் சொல்ல வேண்டியதில்லை. ஆயினும் சாதகர் அறிந்துய்யும் பொருட்டு என்றாய் உபதேசித்ததோர் உண்மையை, விளக்குவான் "உள்ளதை உள்ளபடி சொன்னால் கொள்ளக்கண்ணிக்கு நோப்பாளம்" என்கிற உலக வசனப்படி, உலகத்தார் மனம் நோகாதிருக்க, பூர்வம் "எபிக்டேடஸ்"என்னும் மஹாஞானியார், "வாயால்வல்லவர்" என்றுபேரும் பெருமையும்பெற்றஒரு உலகஞானிக்குச் சொன்னவார்த்தைகளை இதன்முகட்டில் இங்கிலீஷில் பதிப்பித்திருக்கிறபடி அவ்விருவருக்கும் நடந்த சம்வாதத்தை இங்கு இதிஹாஸமாக எடுத்துரைக்கிறோம்.

எபிக்டேடஸ் என்பவர் தத்துவதரிசனம் கண்ட ஒரு மஹாஞானி. பூர்வத்தில் இக்காலத்து வக்கீல்களைப்போல் வாயால்வல்லவரான ஒரு கனதனவான், ஏதோ தனக்கிருந்த ஒரு கோர்ட்டு வியவகாரார்த்தம் ரோமாபுரிக்குப் போக நேரிட்ட பொழுது, அந்த சமயத்தை முன்னிட்டு "காரியத்தொடு காரியமாக" எபிக்டேடஸ் என்னும் மஹாஞானியைப் பார்த்துவரச் சென்றார். வந்தவர் வாயால் வல்லவரென உலகப்பிரஸித்தியாகப் பேர்பெற்றிருந்தும், அவர் உள்ளத்தில் உண்மைக் குணம் இல்லையென்று கண்டஞானியார் அவர் தன்னைப் பார்க்க வந்ததில் பிரயோசன மொன்றுமில்லை யென்று அவர் மனம் புளிக்கப் பேசினார். 'உம்முடைய ஸௌகரியத்துக் கொத்திருந்ததென்று வந்திராதலால், என்னிடத்திலிருந்து நீர் என்னத்தை கிரஹிக்கப் போகிறீர்! சக்கிலிகடை சாமான்கடைக்குப் போனால் அங்கே யென்ன கிரஹிப்பீரோ அதைவிட என்னிடத்தில் நீரொன்றும்கிரஹிக்கப் போகிறதில்லை!" யென்றார்.

"என்?"என்று கேட்டதற்கு, "உம்முடைய ஸௌகரியமே உமக்குப் பெரிதானதால், என்னுடையவார்த்தையினுட்பொதிந்துகிடக்கும் உண்மைத் தத்துவங்கள் ஒன்றையும் கிரஹிக்காது என் பேச்சில் சொற்றதை சொள்ளை கண்டுபிடித்துக்கொண்டு வாச்சாவாதம் செய்வீரேயன்றி உண்மையுள்ளத்தில் ஏறாது!" என்று பதில் சொன்னார்.

"வீறுவாதம்புகலுவாய் வாதநோவாளர்க்கு
மெட்டாத முக்கணுடைமாமருந்தக்கமிர்தமே!"

என்று கூறியிருக்கிறார் தாயுமானவரும் அல்லவா!

அதற்கு வாக்குச்சாதுர்யரான அந்தவக்கீல் சொன்னதாவது:—"உம்மைப்போல் வார்த்

தையினுட்புகுந்து தத்துவவிசாரம் செய்து கொண்டிருந்தேனானால், நானும்உம்மைப்போல் "பாப்பராக," அதாவது பரமஏழையாகவிருப்பேன்: காசு, பணம், பேர், ஊர், அந்தஸ்து, வாஹனம், ஐசுவரியம், பூஸ்திதி, இவை யொன்றுமில்லாத ஏனைவாயனாக உம்மைப் போலிருக்க எனக்குப் பிடிக்கவில்லை."

"சரி! நல்லதாயிற்று! ஆனால் ஒன்று: நீர் அடுக்கடுக்காய் அடுக்கிச் சொன்னதொன்றும் எனக்கு வேண்டியதாயில்லை யாதலால், அவைகளில்லாமை யென்னைப் பாதிக்கவில்லை! அன்றியும் உமக்கு என்ன தான் ஆஸ்தியிருந்தும் கடைசியில் நீர்என்னிலும்ஏழையாகவே யிருக்கிறீரென்பதிற் சந்தேகமில்லை!" என்று எபிக்டெடஸ் அவருக்குப் பதிலுரைத்தார்.

"ஏன் அப்படிச்சொல்கிறீர்! அதுஎப்படி?" என்று வாயால் வல்லவரான அந்தவக்கீல் கேட்க, அவருக்கு அந்த ஞானியார் பின் வருமாறு பதிலுரைக்கலானார்:—

"உம்மிடத்தில் உண்மைக் குணம் இல்லை: ஆதலால் சமதமமில்லை. பிரகிருதிதர்மத்துக்கிசைந் தொழுகும் வகையறியீர். மனோசஞ்சலத்தினின்றும உமக்கு விடுதலையில்லை. போஷகன் என்றும் பாதகன் என்றும் எனக்குக் கவலையில்லை. நீரோ அதைப் பற்றி ஸதா கவலைப்பட்டுக் கொண்டிருக்கிறீர். உம்மிலும் நான் பாக்கியவான்: எப்படியென்றால், "துறவிக்கரசன் துரும்பு" என்றதுபோல், ரோமராஜ்யத்தலைவர் (ஸீசர்) என்னைப் பற்றி என்ன நினைக்கிறாரென்கிற கவலை எனக்கு லவலேசமும் கிடையாது. நான் யாரையும் முகஸ்துதி செய்து பேசுவதில்லை. உம்மிடத்திலிருக்கும் பொன் வெள்ளி சாமான்களுக்கு பதிலாக என்னிடத்திலிருப்பது இதுவே. உம்மிடத்திலுள்ள பாத்திரங்கள் வெள்ளி: ஆனால் உமதுள்ளத்திலிருக்கும் நியாயமோ மண்ணாங்கட்டி நியாயமாயிருக்கிறது! உம்முள்ளத்திண்மையும் மண்ணாங்கட்டியே! உள்ளந்தான் இப்படியிருக்கிறதே, தேஹஸௌக்கியத்தைப்பார்ப்போமென்றால், உமது பசிதாஹமும் ஜீரணசக்தியும் அப்படியே மண்ணாங்கட்டிக் கொப்பாயிருக்கிறது! என் மனது எனக்கு ஒரு மஹாராஜ்யம்! அங்கே நான் ஏகபோகமாய்த் தனியரசு செலுத்துகிறேன்: அதனால் எனக்கு எப்போதும் நல்ல வேலையும் சுகபோகமும் இருந்து கொண்டிருக்கிறது! நீரோ எப்போதும் சஞ்சலப்பட்டுக்கொண்டுபொழுதுபோக்குவழியின்றி அவதிப்படுகிறீர். உம்மிடத்திலிருக்கும் ஏராளமான ஆஸ்தி பாஸ்தி உடைமை யெல்லாம் உமக்கு அற்பமாகத் தோற்றுகிறது: ஏனெனில் உமக்கு அவற்றில் திர்ப்தியில்லை. என்னுடைமை எனக்குப் பெரிதாகத் தோற்றுகிறது. ஏனெனில்நான் ஸதா திருப்தியுற்றிருக்கிறேன். உமக்கும் எனக்குமுள்ள வித்தியாசம் இவ்வகையானதாகவிருப்பதால்,நான் பரமஏழையாகவிருந்தாலும் ஐசுவரியவானே. நீர் உலகைசுவரியமெல்லாம் படைத்திருந்தும் தரித்திரனே! ஏனெனில் ஐசுவரியத்துக்கும் தரித்திரத்துக்குமுள்ள வித்தியாஸம் உடைமைகளில் இல்லை; ஆனால் மனத்திலிருக்கிறது. போதுமென்னுமருந்தே பொன்செய்யும் மருந்து!" என்று சொல்லி முடித்தார்.

வாயால்வல்ல வக்கீலும் பதில்சொல்ல மாட்டாமல் வாயிழந்து தன் வலியுமிழந்து வந்த வழியைப் பார்த்துக்கொண்டு போனார். இந்த மாதிரி வாயால்வல்லவர்கள் இக்காலத்தில் வெகு பேர்களிருக்கிறார்கள். இவர்கள் தேடும் ஆஸ்தியெல்லாம் உப்புப் புளி யரிசிக்கே போதுமானதாகி வயிறு வளர்ப்பதிலே இவர்கள் காலமெல்லாம் போய்விடுகிறது. இவர்கள்

பேர் ஊர் அந்தஸ்து, வாஹனம் இவைகளுக்கு ஆசைப்பட்டு வயிற்றை வளர்ப்பதே முக்கியமாகக் கொண்டு வருகிறார்கள். இவர்கள் வயிற்றை வளர்க்க, வயிறு வளர்ந்து பருத்து ஹிருதயத்தை மூடிக்கொண்டு வியாதியை வளர்க்கிறது. சோற்றுப்படிப்பும்வயிற்றுவளர்ப்பும் .அன்றி வேறொரு பயனறியாப் புல்லியர் கற்றறிமூடராய்க் கர்மத்தை வளர்த்துக் கொண்டு தத்துவ ஆராய்ச்சியின்றிக் "கண்டதே காட்சி கொண்டதே கோலமென" த் தம் வாழ்நாளை வீண்நாளாகக் கழித்து வாதனைப் பட்டு நீர் ரோகத்துக் காளாகி மாளுகிறார்கள். ஐயோ பாவம்; இவர்கள் விதிக்கு யார் என் செய்யலாம்! இவர்கள் கொண்டாடும் சுதந்திரம் பொய்ச்சுதந்திரமென்று சொல்லவும் வேண்டுமோ!

---

# "SANKARA REDIVIVIUS."

## The Prathishta at Kalady.

## காலடியில் ஆதிசங்கரர் ஸாரதாம்பாள் பிராணப் பிரதிஷ்டை.

"At that time the external forms of religious worship had crystallised into lifeless actions, and all their inner meaning had been enshrouded by the scrupulous observance of mere mechanic ritualities. Naturally enough these soul-less practices could not satisfy the religious aspirations of the common people and there was in their hearts a yearning for something truly religious, for that touch of nature which makes the whole world kin, and for some reality in the place of the existing shams."

"There was all confusion as Tukaram forcibly puts it ; peace and good-will seemed to have vanished away from the world. Selfishness was the rule of life; hero-worship had entirely disappeared; selfrespect and consciousness of the past had degenerated into a readiness to serve every master who would pay; drunkenness was prevalent, and the religious teachers had degenerated into mere gramophones. To create order out of this chaos was the task on which the saint-poets laboured hard. They indeed brought on a revival of the spirit of self-respect, dignity, heroism, religious fervour among the masses. They set before the common people the ideal of *Svadharma* based on highest love and dignity of truth. Among this assemblage of poets who uplifted the masses stands prominently the figure of Tukaram, who is reckoned as the Prince of modern Bhaktas."

"Tukaram was pre-eminently a poet of the people. He sang his lays to an illiterate and uncultured audience, and succeeded in the extremely difficult task of awakening in them the spark of Divinity which had so long lain dormant. His poems do not abound in long-drawn and elaborate feats of art and are not replete even with the common ratiocinations so familiar to us in works on Theology. He takes hold of the most ordinary and the most simple aspects of life; and after moralising on them draws from them truths of deep meaning. He attacked the failings of the times with a vigour that made them quail before the severe and straight lashes of his words. His onset upon the foibles of the people were so very fierce that it goes home straight. He places his finger right on the point and being very familiar with the ins and outs of human nature his blow scarcely fails. His *Abhankas* which give advice to the people are full of homely and moral teachings enriched by the width and depth of his observations. He picks up the ordinary games and pastimes, of children and grown-up men, and touches and re-touches them with his imaginative faculty, and after endowing with the power of a spiritual dynamo sends them among the masses on their mission of religious awakening. A man without an ideal and doing no daily effort to realise it, is, says Tukaram, a veritable being of the animal world, a bull, only in human form. He is a useless burden to the earth and a disgrace to his ancestors."— *Gleanings from the Study of Saints.*

"ஓம் ப்ரதிஷ்டாயை நம:"

"ஆள்வாரற்றமாடாய்த் திரிந்த அறிவிலியை
மாள்வார் வலையிற்சிக்காதுகாக்க மருட்டிவிட்டு
ஆள்வான் தனிநினைந் தன்பாலழைப்பித்துக்
கேள்வியிலாத வள்ளுவன்கோயிலிற் கட்டினள் வல்லவளே."—திருவூடல்*

"வாயுண்டு வாழ்த்த; மவுனஞ்செய் போது மவுனவருட்
தாயுண்டு; சேயன்ன வென்னைப் புரக்கச் சதானந்தமா
நீயுண்டு; நின்னைச்சரண்புக நானுண்டென் னெஞ்சம் ஐயா!
தீயுண்டிருந்த மெழுகலவோ கதிசேர்வதற்கே."—தாயுமானவர்.

"They say, Let them say!"

"தன்மயமான சுபாவத்தின் மெள்ளத்தலைப் படுங்கால்
மின்மயமான ஜகம்யாதுரைத்தென்! வெளியிலுய்த்த
சின்மய முத்திரைக் கையேமெய்யாகத் தெளிந்தநெஞ்சே
நின்மய மென்மய மெல்லா நிறைந்த நிராமயமே."—தாயுமானவர்.

ஸ்ரீஜகத்குரு ஸ்ரீமத் ஆதிசங்கராசாரியர் அவர்களுக்கும் ஸ்ரீசாரதாம்பாளுக்கும், பகவான் சங்கரர் திருவவதாரமான காலடிகிராமத்திலே, திவ்யாலயம் ஒன்று கட்டிக் கும்பாபிஷேகம் செய்து அவர்கள் திவ்யவிக்ரஹத்துக்குப் பிராணப்ரதிஷ்டையும் செய்தாகி, எம்பெருமான் ஸ்ரீசாரதாம்பாள் சமேதராய் இப்பரதக்கண்டம் உய்ய திருவுருக்கொண்டு, அவர் திருவவதாரமான விடத்தில்தானே திருக்கோயில் கொண்டருளியிருக்கலாயினர். இந்த பிராணப் பிரதிஷ்டைச் சடங்கு நாளது பிப்ரவரி மீ 21 உ திங்கட்கிழமையன்று ஆசாரிய ஸ்வாமிகள் ஏற்படுத்திய ஸாரதாபீடத்தில் தற்காலம் எழுந்தருளி ஜகத்ரக்ஷகராய் விளங்கும் ஸ்ரீ சிவாபிநவ நரசிஹ்ம பாரதியென்னும் திருநாமம் பெற்றுவிளங்கும் ஸ்ரீமத்சங்கராச்சாரிய ஸ்வாமிகளவார்களால் இந்தியாமுழுமையிலுமிருந்துவந்துள்ள சிஷ்டர்கள் திருக்கூட்டமத்தியில் விமரிசையாய் நிறைவேறப் பெற்றது.

வேதமோதுமுண்மையை விசாரித்துணர்ந்து ஆத்மவழியாய் அதை சித்தாந்தப்படுத்துவோர்தாமே "ஸ்வானுபவச்செல்வர்" என்னும் பேருக்குரியவர். ஏனெனில் ஏட்டுச் சுரைக்காய் கறிக்குதவாதென்றபடி, வெறும் வேதாந்தம்மட்டும் அத்வைசித்தியைக் கொடுக்காது. "வேதாந்தசித்தாந்த ஸமரஸநன்னிலைபெற்ற வித்தகச்சித்தர்கணமே" என்னும் தாயுமானவரால் துதிக்கப்பெற்ற சித்தர் கூட்டம், அருவாயும், உருவாயும், அருவுருவாயும், திருவாயும் இருந்து சாதகர்களை வழிப்படுத்தி அவர்களுக்கு ஆன்மலாபத்தையும் தேசத்துக்கு க்ஷேமலாபத்தையும் அளிக்கும் அதிஷ்டானதேவதைகளாயிருந்து விளங்குகிறார்கள்.

* *Vide* Godward Ho! A Symposium, Second Series, "The Mystic Dalliance"

ஸ்ரீமத்பகவத்பாத ஆதி சங்கராசாரியஸ்வாமிகள் உபநயனமானவுடனேயே ஸந்நியாசம் பெற இச்சைவந்தும் அதற்கு அவர் அன்னை அனுமதிகொடுக்காமையால் நம்புத்ரிப்ராமணர்குலத்துதித்து 3-வயதில் பிதாவையிழக்க நேரிட்ட அவர், உபநயநமாய் 13-வயதாகாப் பாலனுயிருக்கும்பொழுது ஆற்றில் முதலை வாயில் அகப்பட்டுக்கதற, அப்பொழுது அவர் தாய் ஓடிவந்தும் அவரை மீட்கச்சக்தியற்றவராய் நிற்க, சங்கரர் தன்தாயை நோக்கி, "அம்மா, இந்த ஆபத்திலேனும் நான் ஸந்நியாசம் பெற இணங்காயோ!" வென, அவ்வம்மையும், இஹத்திலும்பரமே மேலென்று எண்ணி அவரைப்பெற்ற அவளுடைய தாயன்புதூண்ட இஹபரமிரண்டையும் ஏகமாய் உணர்ந்து அவர்கேட்டபடியே அனுமதி கொடுத்தாள். ஸ்ரீசங்கரர் உலகப்பற்றை யுள்ளத்தொழிக்கவும், அவதாரபுருஷராதலால், பற்றுவிட்டதை யெண்ணினமாத்திரத்தில் ஆத்மலாபம்பெற்றவராய், தாபத்திரயங்களும் நீங்கிவிளங்கலானர். தாபத்திரயங்களும்தணியவே, ஆதிபௌதிகம், ஆதிதெய்விகம் என்கிற பௌதிகதெய்விகவாதனைகள் அவரைஅறவே விட்டொழிந்தன. விட்டொழியவும், ஆதிபௌதிகத்துக்கு அந்நியமாயில்லாத முதலையும் வாயைத்திறந்துகொண்டு அவர்காலைவிட்டுவிட்டு நீரில்மூழ்கிப் போய்விட்டது.

இப்படி முதலைவாய்ப்பட்டு அவர் விடுதிபெற்ற அக்கக்ஷணமே இந்த பாரதவருஷத்தின் சமஷ்டிபாவமூர்த்தியாம் பாரதஜாதீயம் என்னும் ஸ்வஜாதியுணர்ச்சிபிறந்தது. சமஷ்டிவியஷ்டி பாவங்களில் நன்றாகப்பழகிச் சாதனமுறைபற்றிச் சாதிக்காதவர்களுக்கு ஸ்வஜாதீயவுணர்ச்சி யென்றால், "என்னவோ!" வென்று வித்தியாஸமாகத் தோன்றும். க்ஷேத்திரக்ஷேத்திரஜ்ஞ விபாகயோகத்தில் சித்திபெற்றவர்கள் தேஹம், தேஹி யென்றுள்ளது போல், க்ஷேத்திரம்-ஜாதி யென்கிற க்ஷேத்திரக்ஷேத்திஜ்ஞ விபாகம் தானுயேற்படுவதை யுள்ளூற்றுணர்வார்கள்.

குடும்பத்தில் தந்தை தாய் மகன் என்று திரிபுடிபாவம் ஏற்பட்டு விளங்குவது போல, இப்பாரதவருஷத்தின் புனிதபூமியாம் இப்பரதக்கண்ட க்ஷேத்திரத்தில் க்ஷேத்திரம், ஜாதி, ஸ்வதந்திரம் என்கிற திரிபுடிபாவம் தோன்றி விளங்குவது அஹக்கண்பெற்றாருக்கு நிதரிசனமாம். க்ஷேத்திரம் சக்தியானல், க்ஷேத்ரஜ்ஞனை ஜாதி சக்திமான்; சக்திக்கும் சக்திமானுக்கும் அத்வைதபாவம்தானேயேற்படும்; பாலில்நெய்பரவியிருந்தாற்போலவே க்ஷேத்திரமாகிய இத்தேசத்தில் க்ஷேத்திரஜ்ஞனை க்ஷேத்திராத்மா (இதைத்தான் ஸ்வதேசி யென்னும் பதத்திற்கு இலக்ஷியார்த்தமாகக் கொள்ளவேண்டும்) வியாபகமாயிருக்கிறன். பாலினின்றும் நெய்பிறந்தாற்போலவே, க்ஷேத்திரத்தினின்றும் க்ஷேத்ராத்மா பிரிவுபட்டு உருப்படுங்காலையில் சமஷ்டிமனம் மத்தடிபட்ட தயிர்போல் கலங்கிநிற்கும். இதனுல் ப்ரமாதம் ஒன்றுமில்லை. ஏனென்றால், அது "ஸ்வதர்மம்". க்ஷீராப்தியை, மந்திரமலையை மத்தாகக்கொண்டு, வாசுகியைக்கயிறாகச் சுற்றித் தேவர்களும் அசுரர்களும் கடைந்தபொழுது சமுத்திரத்தின் அடித்தரை மந்திரமலையின் சுழற்சியைத்தாங்கப்போதாதுபோக, ஸ்ரீவிஷ்ணு(ஸ்திதிகர்த்தாவாதலால்) ஆமையாக அவதரித்து மந்திரமலையைத்தன்முதுகில் தாங்கினரென்று புராணத்தில் சொல்லியிருப்பது தத்துவமாயுள்ள உண்மையை பௌராணிகமாகச் சொன்னதன்றிவேறல்ல. துல்லியமனதைப் பாற்கடலாகவும், திடப்பட்டஏகாக்ரசிந்தையை மந்த

ரமலையாகவும், உச்வாஸ நிச்வாஸமாம் இருவி னைப்பயனை வாசுகியாகவும், நல்வினைதீவினை யென்னும் இருவினையாளரைத்தேவர்கள் அசுரர்களாகவும் பாவநம் செய்து சமஷ்டிவியஷ்டி பாவங்களால் சாதனைபுரிந்தால் உண்மையான தத்துவம் உள்ளபடி வெளியாகும். தத்துவத்தையுணர்ந்து தத்துவதரிசனம் செய்துகொண்டால் "தத்துவமெங்குண்டு, தத்துவனங்குண்டு" என்னும் திருமந்திரோபதேசப்படி தத்துவமுள்ள விடத்தில் தத்துவனைத்தேடியறிந்து தரிசிக்கலாம்.

இப்படி தத்துவ தரிசனமும் தத்துவன் தரிசனமும் கிடைக்கப் பெற்ருல், திருவாங்கூருக்கும் கொச்சிக்கு மிடையே யுள்ள எல்லைப்பிரதேசத்தில் திருவாங்கூர் சமஸ்தானத்திலிருக்கும் காலடி யென்னும் சிறியதோர்கிராமத்தில் தற்போது நடந்து வரும் வாலைசக்ராகிருதியாகக்கட்டப்பட்ட கோயில் கும்பாபிஷேகம், திவ்ய விக்ரஹப் பிரதிஷ்டைகளின் உண்மை யுள்ளபடி விளங்கும்.

இப்பொழுது ஸ்ரீங்கேரி ஸாரதாபீடத்தில் வீற்றிருந்து விளங்காநின்ற ஸ்ரீஜகத்குரு ஆச்சாரிய ஸ்வாமிகள் உண்மையை உள்ளபடியுணர்ந்து யோகசக்தியும் யோகஸித்தியும் பெற்று விளங்குபவராயிருத்தலால், அவர் முனனின்று செய்விக்கும் பிராணப் பிரதிஷ்டை அவரது மந்திர சக்தியால் இந்தியா முழுவதுமுள்ள உத்தமருள்ளத்தில், அவரவர் பக்குவ முதிர்ச்சிக்குத்தக்கபடி, பரை, பச்யந்தி, மத்திமைவாக்குகளால் பற்பல விதமாய்த் திருக்கூத்து விளைப்பதாயிருக்கிறது.

பரை யென்று சொல்லும் "சுக்குமை வாக்கது சூந்யசம்பாஷணை" யென்பது ஸித்தர் வாக்கியம். "பச்யந்தி வாக்குதுவோ அந்திசந்தி மாலைவெயில்." "மத்திமை வாக்கதுவும் மனக்குரங்கு கட்குடித்து மழலை பேசல்". இந்தமூன்று வகையிலும் நடக்கும் கூத்து மானஸீகமாத்திரமானதால் அதை வாயில் புறப்படும் வைகரி வாக்கினில் சொல்வது தெய்வீகதர்மத்துக்கு ஒவ்வாததாம். ஏனெனில் "வைகரிவாக்கு விகாரமே எப்போதும்" என்பது சித்தர்வாக்கு. இப்படித்திரிவிதமாய் நடக்கும் கூத்தைத் தாமே காணப் பெற்ருர்க்கு அத்தாக்ஷி வேண்டியதில்லை. காணப் பெருவிடினும் பெரியோர் வாக்கில் பக்தி சிரத்தையுள்ளவர்களுக்குத் தாயுமானவரது பின்வரும் திருவார்த்தை நல்லதோர் சான்ரும்.

> காட்டியவந்தக் கரணமுமாயையிக் காய மென்று
> சூட்டிய கோலமுநாறு வியங்கத்துறையிதனுள்
> நாட்டிய நான் றனக்கோரறிவற்ற நான் இவற்
> [றைக்
> கூட்டிநின்றூட்டினையேபரமே நல்ல கூத்திது
> [வே!"

அந்தக்கரணமும் மாயை; நானு விதமாக இயங்கும் புரியஷ்டக சூக்ஷ்மகாயம் போட்ட கோல மெல்லாம் கானற் சலம் போல மாயையிற்றூற்றமாய் முடிந்தது; இப்படியாக ஆத்மா இழிந்து வந்த படித்துறைபோலும் தத்துவத்துறையினுள், இவை யெல்லாம் ஸ்திரப்பட நாட்டிய "நான்"என்னும் அகங்கார தத்துவமும் தனக்கென்றோர் அறிவற்ற அவித்தியாரூபமானது. இப்படி அஸத்தாயுள்ள வற்றை யெல்லாம் கூட்டிச் சேர்த்து அவை யெல்லாம் நிலைபெற்ற அவற்றுள் ஸத் உருவாய் நின்று ஜீவநாடகம் ஆட்டினையே, பரமே! (பராசக்திஸ்வரூபமே!) இது நல்ல கூத்து!—என்ற படி.

யோகதீக்ஷை, ஞானதீக்ஷை பெற்றுள்ளோரும், கேவலம் ஏகிபாவ முதிர்ச்சி பெற்றுள்ள

ரும் கண்டதோர் கனவுகளையும், காட்சிகளையும், உள்ளதுள்ளபடி வரையச்சொல்லி, அவற்றைத் திரட்டி யொருபுத்தகமாகப் பிரசுரித்தால், "ப்ரொபெஸ்ஸர் ஸ்டார்பக்" என்பவர் அமெரிக்காவில் பிரசுரித்திருக்கும் இங்கிலீஷ் புஸ்தகத்தைப் போல் ஆத்மதத்துவ மனோதத்துவங்களை விளக்க அஃதோர் அருமை வாய்ந்த அத்தாக்ஷியாக வேற்படும். ஆனால் அது சாத்தியமில்லை. சாத்தியமானாலும் இத்தேசத்தில் அதற்கு சாதகம் சிறிது மில்லை.

சமஷ்டிமனம் "மத்தடிபட்டாற் போலும்" அலைவுறுங்காலத்தில் எத்தனையோ சாதகபாதகங்கள் நேரிடக்கூடும். இவற்றை யெல்லாம் ஸ்தூலப்பார்வையுள்ளவர்கள் பார்த்து விலக்குதல் கூடாமையாம். ஆதலால் ஜகத்குருவாய் விளங்கும் ஸ்ரீமத்சங்கராசாரியஸ்வாமிகள், இது விஷயத்தில் முன்னின்று, ஸாரதாம்பாள் சமேதராய் ஆதிசங்கரபகவானை பிரதிஷ்டைசெய்து திருக்கோயில் கொள்ளச் செய்தது மிகவும் சிலாக்கியமே.

கலிமிகுந்த இக்காலத்தில் இலக்ஷியார்த்தமான தத்துவங்களெல்லாம் தந்திர மந்திர யந்திராதியுபகரணங்களால் இலக்ஷணப் படுத்தப்படவேண்டியது அவசியமாயிருப்பதால், இலக்ஷியமின்றி இலக்ஷணத்தைமட்டும் மூடமாய்க் கட்டியழும் ஜனங்கள் மனம்புளகாங்கிக்க, ஸர்வசாதகரும் ஸத்லக்ஷியருமாய் விளங்கும் ஆதிசங்கரரை ஸாரதாம்பாள் ஸமேதராய் அவர் அவதாரம் செய்தவிடத்தில்தானே பிராணப்பிரதிஷ்டைசெய்து வைக்கவேண்டியது அவசியமேயாம்.

ஸாமான்யஜநங்கள் மனம் மூடமாயிருந்தாலும் பக்திசிரத்தை நிறைந்தது. அவர்கள் மனத்துளே ஆத்மவுணர்ச்சியுதிக்கச்செய்வது மந்திர திருஷ்டாக்களாகவிளங்குமவர்களுக்கு மிகவும் இலகுவாம். துக்காராம் ஸ்வாமிகள் எல்லாருக்கும் அரிதாமிக்காரியத்தை முன்னொருகால் வெகுசுலபமாகச் செய்து முடித்தார்.

ஸாமான்ய ஜனங்கள்மனது குழந்தைமனம் போல்உபதேசார்ஹமானதன்று. ஆனால் உதாரணத்தினால் மிகவும்பாதிக்கப் படத்தக்கதாம். நல்லுதாரணமாக விளங்க நல்ல உத்தமர் ஒருவர் அவருள்ளிருந்தாலும் போதும். அவருடைய உதாரணம் காட்டுத்தீபோல் எங்கும் பரவி காடாந்தகாரமாய் விளங்கும் அவர்கள் மூடத்தை ஒருநொடியிற்போக்கும்.

இப்பொழுதிருக்கும் சமஷ்டிமனநிலை துக்காராம் ஸ்வாமிகள் காலத்திலிருந்ததற்குச் சரியாக விருப்பதால் அவருடைய காலத்தில் ஜனங்களின் மனோநிலையிருந்த இருப்பையும், அவர் சாமான்ய ஜனங்கள் மனதில் ஆத்மவெளிச்சம் பிரகாசித்து விளங்கச்செய்த பெருமிதமானதோர் பொதுவேலையையும், அதற்காக அவர் கையாடிய சாதனங்களையும் இங்கிலீஷில் காட்டும் குறிப்பை முகட்டில் சேர்த்திருக்கிறோம். இக்காலத்தைப் போல் அக்காலத்திலும், அந்தர்லக்ஷியம் அழிந்து மந்தர தந்திர யந்திர பூஜைகள் மட்டும் வீணே யனுஷ்டிக்கப்பட்டு வந்தன. சாமான்ய ஜனங்களோ, நடக்கும் அக்கிரமங்களைக் கண்டு மனம்புழுங்கி உயிரில்லாச்சவமெனவே அந்தர்லக்ஷிய மில்லா மந்திர தந்திர யந்திரோபாயங்களை வெறுத்தார்கள். துக்காராம்ஸ்வாமிகள் சொல்கிறபடி எல்லாம் குழப்பமாயிருந்தது. தர்மம் தலைகவிழ்ந்து நின்றது. சத்குணமும் சமாதானமும் நாட்டை விட்டு ஓட்டமெடுத்தது. எல்லாரும் சுயநயம் பாராட்டுகிறவர்களா யிருந்தார்கள். பணமே பெரிதாய் அவர்களுக்குத் தோற்றியது. தீரமும்

வீரமும் பூஜிப்பாரின்றிப் பூஜ்யமாயிருந்தது. மதபோதகர்கள் கிளிப்பிள்ளைகளைப் போலும் 'கிராமபோன்' யந்திரங்களைப் போலவும் கற்றுக்குட்டிகளாயிருந்து கேட்டதைச் சொல்லி வந்தரர்கள். இப்படி சமஷ்டிமனம் கலைவரப்பட்டுக் குழம்பிக் கிடந்ததைத் தெளிய வைத்து ஒழுங்குபடுத்துவது மிகவும் கஷ்டமான வேலையாக விருந்தது. இராஜாங்கத்தாராலும் வித்தியா இலாகாதாராலும் ஆவதற் கரிதாய்ப்படும் இவ்வேலை அக்காலத்திற் றோன்றிய புனிதாத்மாக்கள் சிலரால் வெகு நன்றாகச் செய்து முடிக்கப் பெற்றது. அப்படி பொதுஜன க்ஷேமத்துக் குழைத்தவர்களில் பிரதமஸ்தராயிருந்தவர் பக்த சிகாமணியாம் துக்காராம் ஸ்வாமிகள்.

இவர் தனவந்தர்களைத்தேடி அவர்கள் உதவியை நாடவில்லை. ஸர்க்காரையணுகி அவர்கள் சாதகத்தை விரும்பவில்லை. பின் என்ன செய்தாரென்றால், பரையோகத்திலிருந்து தான் கண்டனுபவித்த உண்மைகளைப், பராபரையோகத்திலிருந்து பரை,பச்யந்தி, மத்திமை வாக்குகளால், வெளியிட்டு. அவருடைய வாக்சக்தியினாலேயே துஷ்டநிக்ரக சிஷ்டபரிபாலனம் செய்து வந்தார். ஜனங்களுடைய நித்தியப்படிக் கருமங்களை யுற்று நோக்கி கவனித்து, அவைகளின் தத்துவங்களை வெளிப்படுத்தி எல்லாருக்கும் ஸ்வதர்மோபதேசம் செய்து வந்தார். அவருடைய பாட்டுகளினால் அவர் "வேமன்னபத்தியம்' போல், சத்குணத்தை பலப்படுத்தி துர்க்குணத்தைக்கண்டித்து வந்தார். குழந்தை விளையாட்டுகளை யெடுத்துக் கொண்டு அவைகளில் மறைந்து கிடக்கும் தத்துவங்களை வெளிப்படுத்தி, தத்துவ மூலமாய் தத்துவனைக்காட்டி எல்லார்சிந்தையிலும் ஈசுவரபக்தியுதிக்கச் செய்தார். அக்காலத்தில் நடந்தஅக்கிரமங்களைச் சிறிதும் தாக்ஷண்யமின்றித் தமது சக்திவாய்ந்த வாக்கண்டத்தால், கண்ட துண்டமாய்விழக் கண்டித்து வந்தார், அந்தர்லக்ஷியமின்றி மனமிருளடைந்த ஜனங்களுக்கு ஈசுவரபக்தி யுண்டாகச் செய்து அது மூலமாய் தேசபக்தி விளைத்து வந்தார். அந்தர்லக்ஷியமின்றியும், அந்தர்லக்ஷியத்தைச் சாதிக்க நித்தியானுசந்தானம் செய்வதின்றியும் இருக்கும் மனிதன் மிருகப் பிராயனாகிறான் என்று அந்த உண்மையை எல்லார் உள்ளத்திலும் உறுத்தப் போதித்து வந்தார். அந்தர்லக்ஷியமில்லாத மனிதன் பூமிக்குப் பாரமென்றும் ஜாதிக்கு ஈனம் என்றும் வற்புறுத்திவந்தார்.

இந்தியாவில் அந்தர்லக்ஷியமும் அந்தர்த்தியானமும் ஒழிந்ததினால் தான் எல்லாக் கேடுகளும் வந்துற்றன. ஜீவகாருண்யமே எல்லாவற்றிலும் சிரேஷ்டமென்றும், அஹிம்ஸையே மேலான தர்மமென்றும் கொண்டாடப்பட்டு வந்த இப்புண்ணிய பூமியில் ஜீவவதையும் துரோக சிந்தையும் உதித்து வளர்ந்து எல்லாருக்கும் வில்லங்கத்தை புண்டுபண்ணுவானேன்? ஸ்வதர்மம் அழிந்ததினாலேயே எல்லா வில்லங்கங்களும் வந்து சேர்ந்தன. திரிகாலமும் சந்தியாவந்தனமும், காயித்ரீ த்தியானமும்விடாது செய்துவரவேண்டிய பிராஹ்மணர்கள் ஜாதிமுறை கெட்டு, அந்தர்லக்ஷியமென்பதே யொன்றுமின்றி, அந்தர்த்தியானமும் இல்லாமல், சும்மா 'சோற்றுப்படிப்பு' மட்டும் படித்து மிருகப்பிராயமாய் வயிறு வளர்த்து வருகிறார்கள். அந்தர்லக்ஷியமும் அந்தர்த்தியானமும் தங்கள் ஸ்வதர்மமாக வேற்பட்டுள்ள பிராமணர்களே வருணாசிரம தர்மம் மீறி அந்தர்லக்ஷியத்தை யிழந்து அந்தர்த்தியானத்தை மறந்து, கூழுக்குத் தன்னை

விற்கும் குருடர்களாகி, மற்றவர்களையும் தங்கள் வழியில் நடக்கப் பழக்குகிறவர்களாயிருந்தால், இவர்களைப் பார்த்து மற்றவர்கள் கெட்டுப்போகக் கேட்பானேன்! பிராம்மண தர்மத்தைப்போலவே, க்ஷத்திரிய, வைசிய, சூத்திர தர்மமும் தலைகவிழ்ந்து போயிருக்கிறது.

வருணாசிரமதர்மமென்றால் பிராமணனுக்குப் பிறந்தவனெல்லாம் சோம்பேறியாய் வயிறு வளர்த்துக் கொண்டுதிரியவேணுமென்கிறார்கள். அது வருணாசிரம தர்மம் அல்ல. பிரஹ்மதமத்தையறிந்தவன்பிராம்மணன், இரக்ஷிக்கும் வேலையை ஸ்வதர்மமாகப் பூண்டவன் க்ஷத்திரியன். வியாபார விர்த்தியை ஸ்வதர்மமாக அனுசரித் துழைக்கிறவன் வைசியன். ஊழியஞ் செய்வதொன்றை உத்தம தர்மமாகக் கொண்டு நந்தனைப் போலுழைக்கிறவன் சூத்திரன். இவனைக் கர்மயோகி யென்னும் சொல்லலாம். வைசிய தர்மத்தை யுள்ளபடி யனுஷ்டிப்பான் சித்தயோகி யாவான். க்ஷத்திரிய தர்மத்தை ஸ்வதர்மமாகக் கொண்டவன் இராஜயோகி யாவான். பிராம்மண தர்மத்தை ஸ்வதர்மமாக வுடையவன் ஞானயோகியாம். பக்தியோகம் எல்லாருக்கும் பொது. ஏனெனில் பக்தியின்றிச் செய்யும் யோகம் பலிக்காது. பலிக்கின் சூந்யவித்தையாய் முடியும். அதினும் கேடு வேறு வேண்டாம். அந்தர்லக்ஷியம் அழிந்ததினால்தான் சூந்யவித்தை தலை யெடுக்கலாயிற்று.

ஆதிசங்கரர் திக்விஜயம் செய்துவந்த பொழுது, தக்ஷிண தேசத்தில் சூந்யவித்தையனுஷ்டிக்கும் ஒருவன் அவரிடம் வந்து அவரை மஹா ஸாது வென்றும் பரமதாதா வென்றும் தொழுது வரம்வேண்டுவான் வேண்டி, அவர் தலையைத் தன் இஷ்டதேவதைக்குப் பலியாகக் கொடுக்கத் தனக்கு அளிக்க வேண்டுமென்று யாசித்தான். வாக்குத் தவறாமல் பகவானும் அப்படியே ஆகுகவென்று சம்மதித்து, "அப்பா, நான் சமாதியுறும் வரையில் பொறுத்து, சமாதியிலிருக்கையில் தலையை வெட்டி யெடுத்துக்கொள்" என்று சொன்னார். அந்த சூந்ய வித்தைக் காரனும் அப்படியே செய்வதாகச் சொல்லி நிற்க, ஆதிசங்கரர் சமாதியுற்றார். அப்பொழுது சூந்யவித்யோபாஸகன் அவர் தலையை வெட்டக் கத்தியை ஓங்கினபோது அவர் கிட்ட விருந்த சிஷ்யர்பேரில் நரஸிம்ஹமூர்த்தி அவசமாய் வந்து ஓங்கின கத்தியால் தானே அந்த சூந்யக்காரன் தலையை வாங்கிச் சென்றாரென்று சங்கரவிஜயத்தில் கூறப்பட்டிருக்கிறது.

ஆகையால் அந்தர்லக்ஷியமும் அந்தர்த்தியானமும் ஒரு பொழுதும் கெடாதபடி காப்பாற்றிவரவேண்டியது ஆச்சாரிய ஸ்தானத்திலிருக்கும் குருமூர்த்தங்களான உத்தம புருஷர்கள் கடமையாம்.

இக்கடமையை நிறைவேற்ற தற்காலம் நமது ஆச்சாரிய மூர்த்தமாகவிளங்கும் ஸ்ரீஜகத்குரு ஸ்ரீமத்ஸ்ருங்கேரி சங்கராசாரிய ஸ்வாமிகள் முன்வந்ததைப்பற்றி நாம் ஆனந்த பூரிதராகித்திருவருளைச் சிந்தித்தவண்ணமாயிருக்கிறோம்.

ஓம்தத் ஸத்

"முத்திக்குவித்து முதல்வன்றன் ஞானமே
பத்திக்குவித்துப் பணிந்துற்றுப்பற்றலே
சித்திக்குவித்துச் சிவபரந்தானதல்
சத்திக்குவித்துத் தனதுபசாந்தமே"—திருமந்திரம்.

# A First Lesson in Sociology.

## "Varnashrama Dharma"

## ஜனசமஷ்டி வித்தையில் ஓர் முதற் பாடம்.

---

### வர்ணாச்ரம தர்மம்.

"வித்தை" என்பது "வித்" என்னும் தாதுவிலிருந்துண்டான வார்த்தை. வித் என்றால் அறிதல். அறிவைத்தருவது அல்லது அறியும்வழி வித்தை. இது பரவித்தை யென்றும் அபரவித்தை யென்றும் இருவகைப்படும். பரவித்தையென்பது சித் விலாஸத்தை விளக்கும் வித்தையாம். அபரவித்தை அசேதனமாயுள்ள பிரபஞ்ச சம்பந்தமான ஜடதத்துவங்களை விளக்கும் வித்தையாம். பகவத்கீதையில், பகவான், பரா, அபரா என்று தனக்கு இரண்டு சக்திகள் இருக்கின்றன வென்று அர்ச்சுனனுக்கு உபதேசித்திருக்கிறார். இவையிரண்டும் விபாகித்துணரக்கூடியதாயினும் உண்மையில் இவையிரண்டாகப்பிரிவுபட்டிருக்கவில்லை இவ்விரண்டு முக்கியசக்திகளும் பதினெண் வித்தைகளாக விளங்குவதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அந்தப் பதினெட்டுவித்தைகளும் பரிபூரண அறிவாம் தேவிஸ்தோத்திரத்தில் "மூவாறுமாகிநின்றாள் வித்தையொடவித்தையாம் கலைகளென்ன, காம்யமென்ன!' வென்று குறிக்கப்பட்டிருக்கிறது. பரை, அபரை யென்பதையே வித்தை, யென்று சொல்கிறதுமுண்டு இஃதையே அறிவு அறியாமை யென்றும் சொல்வதுண்டு.

அறிவெப்படி ஓர் அந்தக்கரணசக்தியாயிருக்கிறதோ அப்படியே அறியாமையும் ஓர் அந்தக்கரணசக்தியாகவிருக்கிறது. "காட்டிய அந்தக்கரணமும்மாயை" என்றதனால் அந்தக்கரணசக்தியாகிய இவ்விரண்டும்மாயா விலாஸத்துக்குட்பட்டதே. இந்தமாயை சுத்தமாயை யென்றும், அசுத்தமாயையென்றும் இருவகைப்படும், இதையே "நிருபாதிகம்" என்றும், "ஸஉபாதிகம்"—"ஸோபாதிகம்" அல்லது "உபாதிஸஹிதம்" என்றும் சொல்வதுண்டு. இப்படியாகவுள்ள அறிவு, அறியாமை யென்னும் வித்தைகளை அம்மணமாய் நிறுத்திப்பார்த்தால், (அதாவது உபாதிஸம்பந்தம் நீக்கி ஆராய்ந்தால்,) அவை நினைப்பும், மறப்புமாய் விளங்கக் காணலாம். இந்த நினைப்பு மறப்புத் தானே காலதத்துவத்தைக்கொண்டு அண்டத்திற்பார்க்கில், பிறப்பும் இறப்புமாய்த் தோன்றும். நினைப்பு, மறப்பு என்று தமிழில் சொல்வதை சங்கல்ப, விகல்பமென்று ஸம்ஸ்கிருதத்திற் சொல்வர்.

இந்த ஸங்கல்பம் உதயமாவதையும், லயமாவதையும் அறிந்தவன் எவனோ அவனே யோகி. இந்த சங்கல்ப விகல்பந்தானே சித்தவிருத்திக் குக்காரண மாயிருத்தலால், சமுத்திர ஜலத்திலிருந்தெழும்பும் அலைகளைப்போல் மனாகாசமாம், சித்த வெளியிலிருந்து கிளம்பும் அலைகளாம் சங்கல்ப விகல்பரூப சித்தவிருத்தியை "நிரோதனம்" செய்தவனே, அலைகளைநீக்கிப்பார்ப்பவன். அசைவற்று விளங்கும் சமுத்திர ஜலத்தைக்காண்பதுபோல, சங்கல்விகற்பரூப சித்தவிருத்தியை நீக்கிப் பார்ப்பவன் தானே சலனமற்று விளங்கும் மனாகாசத்தை யோகதரிசனத்தால் உணர்கிறான்.

யோகதரிசனம் என்றால் என்ன?

கர்ப்பூரமும் ஜோதியும் கலந்தாற்போல ஐக்கியபதம் பெற்று நின்றவிடத்தில், கர்ப்பூரமாகியஉபாதியையும் நீக்கி, சோதியாகிய நிருபாதியையும் நீக்கி, இரண்டுக்குமுண்டான ஸம்பந்தத்தைமட்டும் உள்ளபடியுணர்வான் உணர்வு "யோகதரிசனம்" என்னும் சப்தத்துக்கு இலக்ஷியமாம்.

"மற்றொன்று மற்றொன்று மனோபவம்" என்றபடி ஒன்றைவிட்டொன்று பற்றி நிற்பதே தொழிலாயமர்ந்துள்ளது மனோதர்மமாதலால், அம்மனோதர்மத்தை யோர்ந்துணர்ந்து "சித்தவிருத்திநிரோதனமாம்" யோகசந்தியால் மனாகாசத்துட்புகுந்து நிச்சலமான அந்த மனாகாசத்தினுள்ளிருந்து பார்த்தால் அம்மனாகாசம் தன்னறிவுக்குத் "தரிசியமாய்"-"காணப்பட்டதாய்" நிற்கும். மனாகாசம் "காணப்பட்டதோர் பொருளாம்" தரிசியமாக, அதைக்காணும் தான் திருஷ்டா (காண்பான்)ஆக, காண்பானும் காணப்படுபொருளும் சம்பந்தப்பட்ட விடத்தில் பிறக்கும் காட்சியை நிதானித்தறிவான் யோகி. காண்பானும் காண்பொருளும் ஒன்றானவிடத்து, கர்ப்பூரமும் சோதியும் கலந்தவிட

த்துண்டாகும் பிரகாசத்தைப்போல, காட்சி தன்மாத்திரையாய்விளங்குவதைக்கண்டறிந்தவன் திரிபுடிஞானம் பெற்றவனுவான்.' இந்தத்திரிபுடிஞான மில்லாமல் செய்யும் யோகம் பயன்படாதாகையால் இந்தத் திரிபுடி ஞானமே யோகிக்குக் கண்ணுய் விளங்கும். ஆகவே யோகதரிசனம் என்றாலும் திரிபுடிஞானம் என்றாலும் ஒன்று என்று ஏற்படுகிறது.

இப்படிப்பட்ட "திரிபுடி ஞானம்" என்னும் "யோகதரிசனம்" பெற்ற சாதகர் தாமே உபதேசாருகராவார். அவர்களுக்குச் சொன்னதே பின் வரும் ஹிதோபதேசம்.

"இக்காயம் நீக்கி யினியொரு காயத்திற்
புக்குப் பிறவாமற் போம்வழி தேடுமின்!
எக்காலத் திவ்வுடல் வந்தெமக் கானதென்ற்
அக்காலம் உன்ன அருள் பெறலாமே."—
[திருமந்திரம்.

இக்காயம் நீங்கினல் மனம் இன்னொரு காயத்தைப் பற்றும். அது அதின் ஸ்வதர்மம். இனியொரு காயத்திற்பிறவாமல்' இருக்க, "தேஹோஹம்" என்கிற தேஹபாவனைமனத்தில் ஒழியவேண்டும். தேஹபாவனையொழிந்தால், தேஹோபாதி நீங்கியமனம் எஞ்சி நிற்கும். எஞ்சி நின்ற மனமுமதன்தேஹமாம் பற்றுவிட்டொழிய, எஞ்சி நின்றபாவன மாத்திரமாம்" அஹம்" பாவத்தைப்பற்றி நின்று "பிரமோஹம்"எனச் சங்கல்பித்து நிற்கும் இந்த பாவனுயோகத்தில் பாவனமாம் உபாதியை யொழிக்க, அலை யோய்ந்த சமுத்திரம் போல், சங்கல்பம் நழுவிப்போக அஃதோடு சித்தவிருத்தியும் நசித்து, மனம்தேஜோமயமாய் நிற்கும். அநாஹதசப்தத்திற்குள்ளேயிருக்கும்சங்கல்பத் துவனி நீங்கிய விடத்து அதற்குள்ளே யிருக்கும் ஜோதி ஒளிவிட்டுப் பிரகாசித்து நிற்கும், இந்த்ஜோதிரூப தேஜோமனமும் தனது உபாதியொழிந்த விடத்து "திரிஜகத் சிருஷ்டி, ஸ்திதி, வ்யஸன கர்மகிருத்" என்ற சுருதிவாக்கியத்துக்கு இலக்ஷியமாய் சிருஷ்டி, ஸ்திதி ஸம்ஹாரரூபமான மூன்றுசக்திகளும் பொருந்திய ஜீவாத்மாவாக விளங்கும். இஃதையே "இச்சா சக்தி ஞானசக்தி கிரியாசக்தி ஸ்வரூபிண்யை நமஃ" என்னும் இரஹஸ்யநாமத்தால் அர்ச்சித்து அபேததரிசனம் பெற்று தற்போத மொழிந்த ஒழிவில் நிற்பர் தபோதனர். எல்லா தபஸ்களுக்கும் பலன் இதுவே. இதுவேதிரிகால ஞானமளிப்பது. இந்தத்திரிகாலஞானமுற்ற பின் "எக்காலத்தில் இவ்வுடல் வந்து எமக்கு (சித்திக்கல்) ஆனதென்று" விசாரித்து, "அக்காலத்தை உன்ன"க் காலம் மூலமழிந்துகலையிலொடுங்கி நிற்கும். காலத்தின் மூலத்தைஉன்னுவதால்(தியானிப்பதால்)கலாதத்துவ தரிசனம்சித்திக்கும். இந்தக் "கலாதத்துவதரிசனம்" பெறுதலே"அருள்பெறலாம்." ஏனெனில் சூரியனின் ஒரு கிரணத்தையறியப்பெற்றவன் அதுவழியே சூரியவெளிச்சத்தைப் பெற்றவனுவது போலவும், பிறகு சூரியதரிசனம் பெறலாம் போலவும், கலாதத்துவத்தை யோகதரிசனத்தால் அறியப்பெற்றவன் "அருள்பெறல்" ஆவன்.

"தேஹோஹம்" என்றதிலிருந்துதித்த வியஷ்டி ஞானம் "கலாதரிசனம்" வரையிற் சென்று, தான் விஜ்ஞானகலான அந்த அவசரத்தில் வியஷ்டி ஞானத்திலிருந்து உண்மையான சமஷ்டிஞானம் பெற அருகனுகிறன். இப்படி படிப்படியே உயர்ந்து செல்லும் சமஷ்டி வியஷ்டி பாவங்களில் அறிவை "யோக ஸம்யம" சக்தியால் இருத்தி ஸ்வானுபவம் பெற்றவர் பாலசமாதி சித்திபெறுவதற்கான யோக்கியதையுள்ளவராகிறர்.

சூரியனுடைய ஒரு கிரணத்தையறிந்து அதனல் வெளிச்சத்தைப் பெற்று விளையாடுவது வியஷ்டி வித்தை. அந்த ஒரு கிரணத்தோடும் யோகஸம்யமத்தால் கர்ப்பூரமும் தீபமுங்கலந்தாற்போல ஐக்கியபதம் பெற்று" பருந்தேபோலும்அதன்வழியேசென்று சூரிய தரிசனம் பூரணமாய்ப்பெறுவது சமஷ்டிவித்தையாம்.

இப்படிச் சோபான முறையே சிரமப்பட்டு அரிய தவமியற்றி அடையப் பெற்ற சமஷ்டிவித்தையானது சமஷ்டி யுபாதியின்சேர்க்கையால், பலவிதமாகப்பரிணமித்து விளங்கும். இதைத்தான் 64-கலைகளாகப் பிரித்து கலா சாஸ்திரம் செய்திருக்கிறர்கள்.

'இப்படி சமஷ்டி ஞானம் பெற்ற தீர்க்கதரிசிகள் ஜனசமஷ்டியின் இருப்பறிந்து அதைச் சீர்திருத்

திச் செம்மைப்படுத்தி நற்கதி சேரச் செய்ய லாயக்குடையவர்களாகிறார்கள். வியஷ்டி வித்தையின் பூரணத்தில் சமஷ்டிவித்தை உதயமாகிறபடியால், ஜீவன்முக்தர்களாய் விளங்குவோரே சமஷ்டிவித்தைசாதகம் பயில அருகரானவர்களாம். ஜீவன்முக்தி திசையிலிருந்து சமஷ்டிவித்தையுபாஸனைதொடங்கி விதேஹகைவல்யம் பெறமுயலுவோர், ஆதியில் பிண்டத்தைக் கொண்டுழைத்து பாதத்தவத்தை யுணர்ந்துய்ந்தது போலவே, பின்னர் (அதாவது, ஜீவன்முக்தி பெற்ற பின்னர்) அண்டத்தைக் கொண்டுழைத்து அவதூதர்களாக விதேஹகைவல்யம் பெற்று சித்தமுத்த புருஷர்களா விளங்குகிறார்கள். இவர்களுக்குத் திருமூலர் சொல்லியபடி,—

"ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமனில்லை நாணுமே
சென்றே புகுங்கதியில்லை நுஞ்சித்தத்து
நின்றே நிலைபெற நீர் நினைந்துய் மினே."

என்பது ஸர்வஸாதக மானதோர் ஹிதோபதேசமாம்.

இவர்களுக்குக் "குலம் ஒன்றே!" அது எது வென்றால் "மனுகுலம்" (Human Race).

"தேவனும் ஒருவனே!"—அவர்கள் வழிப்படும் கடவுளும் ஸச்சிதாநந்தஸ்வரூபியாம் இரண்டற்றுவிளங்கும் வஸ்து தானே.

அவர்களுக்குப் பிறப்புபயமில்லையால், சங்கல்பதோஷமும், வினைப்பயனும் (கர்மபலனும்) அவர்களைப் பற்றாது. ஆகையால் "நன்றே நினைமின் நாணுமே" யென்றார். அவர்கள் நினைக்கும் நினைப்பு அவற்களைப் பற்றா தாயினும், உலகத்துக்கு உள்ளபடியே பலனைத் தரும். ஆகையால் தான்,—

"அருவாயிருந்து அவர் உலகையும் ஆட்டி வைப்பாரே" என்று சொன்னது. பின்னும் ஆராய்ந்து பார்க்கில் அவர்களுக்கு,—

(1) "நமன் இல்லை."
(2) "சேன்றே புகும்கதியில்லை."
(3) "அவர் சித்தத்துக்கு அந்நியமாய் அண்ட பிண்ட சராசரங்கள் எதுவுமில்லை.

எல்லாம் அவர்கள் சித்த விருத்திமாத்திரையினாலேயுண்டானதால் "ஆயினவனைத்தும் ஆனதவனருளாலே'யென்பது அவருக்குப் பொருந்தும், ஆதலால்அவர்களை,—"நுஞ்சித்தத்துநின்றே நீர் நிலைபெறநினைந்து உய்மின்" என்றார்.

இப்படிப்பட்ட மஹான்களில் ஒருவர் ஆதி சங்கராசாரியஸ்வாமிகள். அவர் உலகுய்வான் கருணை பூரித்து ஸாரதாம்பாளை உபாஸித்து வசப்படுத்திக் கொண்டு, அத்தேவியின் சக்தி விசேஷத்தால், தன்வலியிழந்த பௌத்த ஸமயக் கொள்கைகளால், கெட்டுக்கிடந்த வர்ணாசிரமதர்மததை மறுபடியும் உய்ப்பித்து ஷண்மத ஸ்தாபனம் செய்து அத்வைத மதத்தை யாவரும் அநந்நியமாய்க் கொண்டாடி ஆசிரயிக்கும் படிஸ்திரமாய்ஸ்தாபித்தார்.

அப்படியாப் பட்ட மஹானுடைய கொள்கைகள் இப்பொழுதுள்ள நவ நாகரிக மினுக்கினாலுண்டான மயக்கில் அந்தர் லக்ஷியமும் அந்தாத்தியானமுமழிந்த நம்மவர் மனத்தில் நிலைபெறாது வழுவிப் போகலாயின. ஸநாதனமான அக்கொள் கைகளை உலகைசுவரியமும் சோற்றுப்படிப்புப் படித்து வாச்சா ஞானமும் பெற்ற புல்லியர் மனத்தினின்றும் நழுவிப் போனதால், அந்த ஸநாதன தர்மத்துக்கு ஒரு குறைவும் வராது. ஆனால் அதை யிழந்த மனிதர்கள், பால் வற்றிய பதரே போலும் நற்கதி மார்க்கம் (Progressive path) சேராது தூர்க்திக்ககாளாவர். அவர்களைப் பற்றி நமக்கு விசாரமில்லை. ஆனால், காலடியில் நடந்த திருவாலய கும்பாபிஷேக திவ்ய விக்ரஹ பிராணப் பிரதிஷ்டைகளால், அந்த ஸநாதனதர்மமானது மறுபடியும். தலையெடுக்கத் துவங்கினதுபோதுமாயிற்று. அப்பொழுது ஸ்ரீ ஸ்ரீங்கேரி ஜகத்குரு ஸ்ரீமத் சங்கராசாரிய ஸ்வாமிகள் திருவாய் மலர்ந்தருளிய திருவுபதேச மந்திரமொழிகளில் யாவரும் தத்தநிலைமையிலிருந்து நழுவாமல் ஸ்வதர்மத்தைக் கைநழுவவிடாது ஆசிரயித்து வரவேண்டுமென்று வற்புறுத்தியருளினார். அந்த மஹான் ஸ்ரீமத் ஆதிசங்கராசாரிய ஸ்வாமிகள் இந்தஞானபூமியில்ஸ்தாபித்துள்ளஸநாதனதர்மத்தையே ஸ்திரப்படுத்தவேண்டி அப்போதனை செய்தாராதலால் அவர் திருவடியைத்தலையில்

சுமைந்து அவர் ஆக்கினைக்குட் பட்டு நடக்க நாமெல்லாம் கடமைப் பட்டிருக்கிறோம்.

வாயால்வல்லவரென்று பேரெடுத்த வியபசார வாக்கினர் போடும் மாயா ஜால வீண் வேஷத்தைக் கண்டு நாம் மயங்கவேண்டாம். நல்லொழுக்க மில்லாதோர் நாயினுங்கடைபராவர். திரிகரண சுத்தியாய் நடந்து கொள்ளாதவர் நடைப் பிணமாவர். வாயால் வல்லவரான வீண்வேஷதாரிகள்பேச்சிலும், வாயில்லா நாயனுராய் விளங்கும் மௌன தேசிகர் திருவாக்கே மதிக்கற்பால தென்றும், அதுவே பயன் படுவாக்கா மென்றும் நாம் இப்பாதக் கண்ட வாசிகளுக்கு வற்புறுத்திக் கூறத்தேவையில்லை.

ஆகையால், சூரியஜோதியானது ஸ்படிகத்தினுலே பலவர்ணமாகப் பிரிந்து இந்திர தனுசுபோலும் அழகு பொருந்தி விளங்குவது போலே, "ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்" என்ற ஸ்வயம் பிரகாசமான "ஏகமேவாத்விதீயமான" "ஸத்தியம்" மந்திர திருஷ்டா, ஞான திருஷ்டா, யோகதிருஷ்டாக்களின் ஸ்படிகம் போன்ற மனதினல் பார்க்கும்பொழுது வர்ணசிரம தர்மத்துக்குட் பட்டதாகவிளங்கும். உபாதியொழிந்தால் எல்லாம் ஏகமாய் விளங்கும். இந்த வுண்மையை ஜனசமஷ்டி வித்யையில் நாம் முதலாவதாகக் கற்கவேண்டிய முதற்பாடமென்று கொண்டு நாமெல்லோரும் உள்ளத்தில் உன்னி மனத்திற் பதியவைத்துக் கொள்ளவேண்டும். அப்பொழுதுதான் ஸ்வதர்மம் வழுவாது நடக்க நமக்கு குருவருள் சித்திக்கும். குருவருள் தானே திருவருள் பயக்கும். ஓம் தத்ஸத்

---

## Free from Bonds.
## The Autobiography of a Taluq Gumastha

### *அவிழ்த்து விட்டகழுதை

யௌவனம்—விவாகம் (தொடர்ச்சி)

சோக ரஸம் என்பதுநியாயமும்அநியாயமும் எதிர்த்து நிற்பதானுலுண்டாவதல்ல—(ஒரு) நியாயமும் (மற்றொரு) நியாயமும் எதிர்த்து நின்றால்தான் உண்மையான சோகரஸமாகும். இதிலொருகாலும் அதிலொருகாலுமாகவைத்துப் பொதுவான நியாயத்தை எட்டிப்பிடிப்பதே தப்பிக்கும் வழி.

ஒரு நாள் ஏகாதசியன்று சாயந்திரம என் தாயார் ஜபம் செய்து கொண்டிருக்கும் பொழுது அவசரமாய் என்னைக் கூப்பிட்டாள். "எனக்கு மயக்கமாயிருக்கிறது, கைகால் ஓய்வாயிருக்கிறது. நான் காலைவரையில் இருக்க மாட்டேன். என்னை எங்கேயோ தூக்கிக்கொண்டுபோவது போலிருக்கிறது. பிராயச்சித்தம் செய்து விடு. நான் வேண்டியபடி கிடைத்துவிட்டது. யாருக்கும் என்னால் இருக்கும் பொழுதும் இறக்கும்பொழுதும் ஹிம்சையேயிருக்கக் கூடாதென்பது என் பிரார்த்தனை" என்றாள்.

அம்மா நீ எனக்கும் பிறருக்கும் செய்திருக்கும் உபகாரங்களைக் கணக்கில் சேர்த்தாயில்லையோ?" என்றேன்.

"என்னால் யாராவது உபகாரம் அடைந்தால் அது அவர்கள் அதிர்ஷ்டமேயொழிய என் பிரயத்தனம் ஒன்றுமில்லை." என்றாள்.

இதற்குள் வாத்தியாரை வரவழைத்தேன். அவர் வந்ததும் என் தாயார் தலையை என்மடிமீது வைத்து கர்ணமந்திரத்தை ஸ்வரத்துடன் நிறுத்திச் சொன்னேன். சந்தோஷமாய்க் கேட்டள். என் தம்பியும் என் மனைவியும் அழுதார்கள். அவர்களைக் கூப்பிட்டு "நான் உள்ள நாளெல்லாம், உழைத்தது போதாதா? இப்பொழுது கொஞ்சம் இளைப்பாற உத்தேசிக்கிறேன். அழாமல் உத்தரவுகொடு. உள்ளங்காலில் வெள்ளெலும்பாட ஓடி உழைத்தேன். நீ

* தன்னையறிந்து தன்தொழிலிற்பிரவேசிக்குமனம் தடையறியாது.

ங்கள் இருவரும் பரஸ்பரம் விசுவாசமாயிருந்தால் உங்கள் வீட்டை விட்டு நான் அகன்று போகமாட்டேன்: நான் ஏற்றிவைத்தவிளக்கு எரியுமளவும் நான் சமீபத்திலிருப்பேன் என்றாள்.

"அம்மா நீ எனக்கென்ன ஞாபகமாகக்கொடுக்கிறாய்" என்றேன்.

"உனக்குத் தெரியாததென்ன நான் சொல்லப் போகிறேன்! உன் தேகத்தை செவ்வையாய்க் கவனித்துக்கொள். தேகம்வேறு ஆத்மாவேறு என்றும் அதற்கும் இதற்கும் சம்மந்தமில்லை, ஒன்றில்லாமல் இன்னொன்று கடைத்தேறக் கூடும் என்றும் சொல்பவர்களை நம்பாதே. பெண்டாட்டி யில்லாமல் புருஷன் கடைத்தேறுவான், புருஷனில்லாமல் பெண்டாட்டி கடைத்தேறுவாள் என்பதைக் கனவிலும் நம்பாதே. சிருஷ்டியில் இல்லாத பிரிவினையை நீ கற்பிக்காதே. இவ்வுலகில் ஒருவரை வஞ்சித்து ஒருவர் வாழ இன்னும் இடம் ஏற்படவில்லை. "சர்வம் விஷ்ணுமயம் ஜகத்" என்பதை அனுஷ்டானத்தில் கண்டுகொள். உன் பத்நியை தேவி ரூபமாக பாவித்து நடந்துகொள்." என்றாள். பிறகு என் தம்பியைக் கூப்பிட்டு முத்தமிட்டு "நீ அண்ணா சொல்லைத் தட்டாமல் நடந்துவா" என்று கண்ணை மூடினாள். இரவு 10 மணிக்கெல்லாம் சுவாசம் நின்றது. மறுநாள் தகனம் முதலிய கிரியைகளெல்லாம் செய்துவிட்டு வீட்டுக்குத் திரும்பிவந்ததும் தனியான காட்டுக்குள் பிரவேசிப்பது போலிருந்தது.

இதன் பிறகு என் தம்பி பட்டணத்தில் சட்டப்பரீக்ஷைக்குப் படிக்கப்போய்விட்டான். அவன் மாமனார் அவனுடைய செலவுக்கு வேண்டிய பணம் கொடுக்கத்தயாராயிருந்தபோதிலும் அவன் ஒழிந்தவேளைகளில் பள்ளிக்கூடத்துப் பிள்ளைகளுக்கு வீட்டில் பாடம் சொல்லிக்கொடுத்துக் கொண்டும் அவர்களுடனேயே குடியிருந்து கொண்டும் காலக்ஷேபம் செய்து வந்தான். போதாவிட்டால் என்னைக் கேட்டுப் பணம் வாங்கிக் கொள்வானே யொழிய மாமனாரைக் கேட்கமாட்டான்.

நான் வெகுநாளாய் எங்கேயாவது ஓடிப்போக வேண்டுமென்று கொண்டிருந்த எண்ணம் என் தாயார் இறந்த பிறகு என்குழந்தையினிடத்திலிருந்த அபிமானத்தினால் அதை நிறைவேற்ற மனம் வராமல் கொஞ்சம் கொஞ்சமாய்க் குறைந்தது. பெண்டாட்டியின்பேரில் கோபித்துக் கொண்டு அறியாக் குழந்தையைக் கஷ்டத்துக் குட்படுத்துகிறதா என்று தோற்றிற்று. ஆனால் அடுத்த வருஷம் ஒரு விஷயம் நேர்ந்தது. என்னுடன் பள்ளிக்கூடத்தில்படித்த ஒரு சிநேகிதனே எங்கள் ஆபீஸில் தாசில்தாராக வந்தார். அவர் மதத்தில் கிறிஸ்தவர். அவர் எல்லா சட்டப்பரீக்ஷைகளிலும தேறியிருந்தார். அடுத்தாற்போல் 17½ ரூபாய் குமாஸ்தா வேலை ஒன்று காலியாயிற்று. பழைய சிநேகிதனுக்கு உபகாரம் செய்யவேண்டுமென்று அந்தத் தாசில்தார் அந்த வேலையை எனக்கு சிபார்சுசெய்து கொடுத்தார்.

கஜானக்கணக்குகளில் நான் நன்றாய்ப் பழகியிருந்தபடியால் அந்த வேலையே எனக்குக் கொடுக்கப்பட்டது. அதாவது எனக்கு "நகதி குமாஸ்தா"என்றுபெயர். இரண்டொரு குமாஸ்தாக்களுக்கு இந்தவேலைதங்களுக்குக்கிடைத்திருக்கவேண்டியதுஎன்று மனவருத்தமுண்டு. என்சம்பளம் உயர்ந்ததை என் மனைவி கேட்டு சந்தோஷமடையட்டும் என்று அவளிடத்தில் சொன்னேன். "எங்கள் அப்பா சிபார்சி

னால் உயர்ந்த சம்பளம் கிடைத்ததோ'' என்றாள்.

"இல்லை. இப்பொழுது வந்திருக்கும் தாசில்தார் என்னுடன் படித்த சிநேகிதர். அவர் சிபார்சு செய்தார்" என்றேன்.

"அவர் உங்களுடன் படித்தவர்தானே அவருக்கு மட்டும் எப்படி தாசில்தார் வேலை கிடைத்தது?'' என்றாள்.

"முதலாவது அவர் கிறிஸ்தவர். இரண்டாவது, அவர் எல்லா பரீக்ஷைகளும் தேறியிருக்கிறார்.''

"எப்படியிருந்தாலென்ன? உங்களுடன்படித்தவர்களெல்லாம் பெரியவேலையில் தானிருக்கிறார்கள். ஆச்சுது, நாளைக்குத்தம்பி ஹைகோர்ட்வக்கீலாகப் போகிறார். அவர்பெண்டாட்டிக்கு நான் புடவை துவைத்துப்போடவேண்டும். உம்!'' என்று பெருமூச்சு விட்டாள்.

"நீங்களும் அவரைப்போல் படித்துப் பரீக்ஷை கொடுத்திருந்தால் இத்தனை நாள் அவரைப்போல் வந்திருக்கலாமே? ஏன் வேண்டுமென்று இப்படி அழிம்பு செய்கிறீர்கள்? நமக்கு 15ரூபாயிலிருந்து 17½ரூபாயானால் மோக்ஷத்தை எட்டிப் பிடித்துவிட்டது போலிருக்கிறது. அவர்களுக்கெல்லாம் 100ரூபாய்க் கடுத்தது200 ரூபாய், அதற்க்கடுத்தது 300ரூ என்று நூற்றுக்கணக்கில் சம்பளம் உயர்கிறது. அவர்களுடைய ஒரு சம்பளத்துக்கும் அடுத்த சம்பளத்துக்கும் உள்ள வித்தியாசத்தையே நமக்கு ஆயுசமுழுவதும் கொடுத்தாலும் போதுமென்று தோற்றுகிறது'' என்று போய்விட்டாள்.

ஒட்டகத்தின் முதுகின் மேல் ஒவ்வொரு வைக்கோலாய் சுமத்திக்கொண்டே வந்தால் கடைசியில் அதன் முதுகும் ஒடிந்து போய்விடுமென்று ஒரு வசனமுண்டு. ஒட்டகம் போன்ற தாலுக்கா குமஸ்தாவாகிய என் முதுகில் சுமத்தப்பட்ட வைக்கோல்களில் கடைசி வைக்கோல் மேற் கூறிய வார்த்தைகளே. அன்று சாயந்திரமே ஒரு மாசத்துக்கு ரஜாவுக்கு உத்தரவு கேட்டேன். "இப்பொழுதுதான் உத்தியோகம் உயர்ந்திருக்கிறது அதற்க்குள் என் ரஜா?'' என்று தாசில்தார் ஆச்சரியப்பட்டார். "பட்டணத்தில் என் தம்பிக்கு உடம்பு சரியில்லை. நான் போய்ப் பார்க்கவேண்டும்'' என்று பொய்சொன்னேன். வீட்டில் என் மனைவியிடத்திலுமப்படியே சொல்லிவிட்டு மறுநாளிரவுபுறப்பட்டுப் பட்டணம் போனேன். அங்கே என் தம்பியை நான் பார்க்கப்போகவில்லை. அங்கிருந்தபடிமறுநாள் முதல் கால்நடையாய் தேச சஞ்சாரம் செய்ய ஆரம்பித்தேன் கையில் பணமிருந்தால் கப்பல் ஏறி வேறுதேசம் போயிருப்பேன். தினம் பத்து மயிலுக்குக் குறையாமல் நடப்பேன். கையில் 50ரூபாய் பணமும் தீபாவளிக்கு மாமனார் செய்துகொடுத்தமோதிரமும் எடுத்துக்கொண்டுபோனேன். நான் புறப்பட்டுப்போகும்போது என் மனைவி ஆறுமாதம்கர்ப்பமாயிருந்தபடியால், ஒருகுழந்தையை விட்டுப் பிரிவதற்கே மனம் வராதிருக்க இன்னொரு குழந்தையும் பிறந்து விட்டால் அப்புறம் நாம் வெளிப்புறப்படவே முடியாது; தொழுவதில் கட்டப்பட்ட கழுதையாய் நிற்க வேண்டியதுதான் என்று பயமுண்டானதனல்தான், அவ்வளவு அவசரமாய்ப் புறப்பட்டேன். புறப்பட்டு எல்லாவித தேசங்களையும் ஜனங்களையும் பார்த்துக் கொண்டு போனேன்.

வெகுநாளாய்க் கண்ணுக்குப்புலப்படாத ஒரு பாறையை நோக்கிப் போய்க்கொண்டிருந்த என் வாழ்நாளென்னுங் கப்பல் இன்று அப்பாறையில் தாக்கிவிட்டது. கொந்தளித்துக்கொண்டிருக்கும் சிருஷ்டி சாகரத்தில் ஒரு திவலையாகிய எனக்கு (என்தத்தளிக்கும் ஸ்திதியைக்காணக்) கண்கள் தவிர வேறொன்றும் பகவான்கொடுக்கவில்லை ஜனசமூகங்களின் மத்தியில் காட்டில் சஞ்சரிக்கும் புலிபோல் தனியனாய்த்திரிந்தேன். என் ஹிருதயத்தையே நான் தின்றுகொண்டிருந்தபடியால் என்னை மாம்சபக்ஷணியென்று சொல்வதற்கில்லாமலிருந்தது யாரோடாவது சம்பாஷணை நேர்ந்தால், பத்திரிகைகளில் என்ன சமாசாரம்என்றும் மழையெங்கே பெய்ததுயெங்கே பெய்யவில்லைஎன்றும் கேட்பதைத்தவிர மற்ற விஷயங்களில் என் வாயைப் பூட்டிக்கொண்டேன். என்ன உத்தேசத்துடன் இவ்வளவு தூரம் அலைந்தேன் என்று கேட்டால், பதில் சொல்ல முடியாது. நான்அப்பொழுது குடியிருந்த சூனியப்பிரதேசத்தில் உத்தேசம் என்னும் நக்ஷத்திரம் உதித்ததில்லை. வேட்டையாடப்பட்ட மிருகங்கள் தங்கள் மேல் விழுந்த பாணத்தின் வேதனையிலிருந்து தப்பித்துக்கொள்ள உத்தேசித்தவைபோல் இன்ன இடம் போகிறோமென்று தெரியாமல் ஓடுமாம். வேதனை தங்கள் சரீரத்திலேயே ஐக்கியப்பட்டிருப்பதை அறியாதனபோலும் அந்தஇனத்தில் நானொருவனானேன். என் காலின்கீழிருக்கும் நிலம் நெருப்பானது போற்றவித்தேன். என் எண்ணங்களும் மனத்தோற்றங்களும் என்னைப் போ போ என்று தூண்டின. சுற்றிலுமுள்ள மரஞ் செடிகள் புற்பூண்டுகள் கூட என்னைப் போ போ என்று துரத்தின. கால சக்ரம் சுழலும்போது அதிலொட்டிய தூசியாகிய நான் மட்டும் எப்படிச் சுழலாமலிருக்கமுடியும்.?

வழியில் சாப்பாட்டுக்கு என்ன செய்தேனென்று கேட்கவேண்டாம். சாகத்துணிந்தவனுக்கு சமுத்திரம் முழங்கால்மட்டு ஜலம் என்பதுபோல் எந்த வேலையும் செய்யத்துணிந்த ஒருவன் ஒரு சுண்டுவிரலினால் வேலை செய்து தனக்குப் போதுமான அளவு சம்பாதித்துக் கொள்ளக்கூடும். ஆனால் இடையே இரண்டு கைகளினாலும் தனக்கு உபத்திரவங்களை சம்பாதித்துக் கொள்ளாமலிருக்கவேண்டும்.

ஒருமாதத்திய என்ரஜாமுடிந்தவுடன் இன்னும் 6 மாதத்துக்கு ரஜாவுக்கு எழுதிவிட்டு மறுநாளே அவ்வூரைவிட்டுப்புறப்பட்டேன் இப்படி யெல்லாம் அலைந்தால் நம்மை மாமனார்வீட்டிலிருந்து யாராவது தேடிப் பிடித்து அழைக்க வருவார்கள் என்று எண்ணினேன். மூன்று நான்கு மாதங்களாயின: யாரையுங்காணோம். பாவம்! அவர்கள் என்னை எந்த விலாஸத்தில் தேடுவார்கள்! வலுவிலே கடிதம் எழுதவும் அவமானம்! வீட்டிலிருந்தால் சண்டையும் மனஸ்தாபமுமாகவாவது காலத்தைத் தள்ளலாம். இப்பொழுதோ என்னிடத்தில் சிநேகம் பாராட்டாவிட்டாலும் விரோதம் பாராட்டுமளவுகூட நம்மைக் கவனிப்பாரில்லை. எல்லாரும் அவரவர்கள் வேலையையே கவனித்துக் கொண்டிருந்தார்கள். அதாவது ஏற்கனவே தங்களுக்குக் கிடைத்திருந்த சண்டைச்சரவுகளை விட்டு விலகுதல் என்னும் முட்டாள்தனமான காரியத்தை அவர்கள் செய்யவில்லை. எனக்குப்பொழுதுபோவது ஒரு பெரிய பாரமாயிருந்தது. தினம் வழக்கமாய்ப்பட்டுக் கொண்டிருந்த கஷ்ட நிஷ்டூரங்கள் தேவாமிருதம்போல் மறுபடி கிடைத்தால் போதுமென்று ஆசையாய் விட்டது. இவ்வுலகத்தில் வேலையில்லாதவனை

ப்போல் துர்ப்பாக்கியன் யாருமில்லை. உலக முழுவதும ஒரு பெரிய நீராவியந்திரம்போலும் நான் அதனால் நொறுக்கித் தூளாக்கப்படுவதற்கு தயாராய் அதற்குள்போடப்பட்டுக்காத்துகொண்டிருந்த தானிய விதைபோலுமிருந்தது. வெகு நாளாய்ப் புகைந்து கொண்டிருந்த என் ஹிருதயம் எரிந்து சாம்பலாய்ப் போங்காலம் நெருங்கியது போலிருந்தது.

என் உயிரைக் கொண்டுபோகிறதற்காக வந்தாலும் சரி, யமதர்மராஜனே சாவித்திரிக்குத்தோற்றினதுபோல் என்னெதிரில் தோன்றினால் அவனிடத்திலாவது என்மனதைச் சொல்லி இரண்டொரு கேள்விகள் கேட்கலாமென்று உத்தேசித்தேன். அந்தக்கடைசித் தோழன் நம்மை ஒரு நாளும் கைவிடமாட்டானென்பதில் எனக்கொருதிருப்தி யிருந்தது.

ஒரு நாள் காசி க்ஷேத்திரத்தில் விசுவநாத சுவாமிகோவில் சந்நிதித் தெருவில் நடப்பகவில்போய்க் கொண்டிருக்கும் பொழுது ஒரு எண்ணமுண்டாயிற்று. அப்படியே அந்தக் கோபுரத்து நிழலில் உட்கார்ந்தேன். என் வாழ்நாள் முழுவதும் பிறந்தது முதல் அன்றையதினம் வரையில் நடந்த ஒவ்வொரு விஷயமும மரணவஸ்தையில்தோற்றுவதுபோல் ஒவ்வொன்றாய் என் மனக்கண்முன் ஊர்வலம் வந்தது. சிறுபிள்ளையா யிருக்கும்பொழுது சிரித்து விளையாடியதும். அழும்பொழுது தாயார் செய்யும் சமாதானமும், பள்ளிக்கூடத்துப் பிள்ளையாய்க் கவலையில்லாக்காலங்கழித்தும், தகப்பனார் இறந்து குடும்பத்துக்கு யஜமானனானதும், கலியாணம் பண்ணி கிரஹஸ்தனாய் வாழ்ந்ததும், உத்தியோகஸ்தனாகி அதிகாரம் வகித்ததும், பிறர் அதிகாரத்துக்குப் பயந்து நடந்ததும், தாயார் க்கும் பொழுது சொன்ன கடைசி வார்த்தையும் ஒவ்வொன்றாய் சுவற்றில் எழுதிய சித்திரம்போல் பிரத்தியக்ஷமாய் வந்து கொண்டிருந்தது. பிறகு இதெல்லாம் நான் செய்த காரியங்கள் என்னும் எண்ணமும் நழுவியது. இவ்வளவு நாளாய் ஒரு நீடித்த நாடகம் நடந்தது போலும் அதை நான் பார்த்துக்கொண்டிருந்தவன் போலுமிருந்தது. அப்பொழுது அக்கம்பக்கத்தில் தெருவில் போய்க்கொண்டிருந்தவர்களுங்கூட எழுதிய படம்போல் தோற்றினார்கள். அவர்களும் நம்மைப்போல் உயிர்உள்ளவர்கள் தாம் என்பதை மறந்தேன். அவர்கள் பேசிக் கொண்டிருந்த வார்த்தைகளெல்லாம் கனவில் கேட்ட சங்கீதம்போல் அமுங்கிபோயிற்று.

அப்பொழுது என்மனதில் ஒரு குரல் கேட்டது "என்னடா பயப்படுகிறாய்? சாவுக்கா? வாழ்வின் கஷ்டங்களுக்கா? குடும்பத்தின் கொடுமைகளுக்கா? பயங்காளி! உனக்கு ஒரு ஹிருதயமில்லையா? ஏதாயிருந்தாலும் பொறுத்துக் கொள்ள தைரியமில்லையா? இப்பொழுது தற்காலம் தெருவில் அடித்துத் துரத்தப்பட்டிருந்தபோதிலும் பிறப்பில் சுவதந்திரனாய்ப் பிறந்தவனுக் குரியபடி உன்னைப்பக்ஷிக்கும் யமனை நீ பக்ஷிக்க சாமர்த்தியமில்லையா?" என்றது. அப்பொழுது இவ்வளவு நாளாய் என்னைச்சுற்றிக்கொண்டிருந்த சனியன் "என்வீண் யோசனையெல்லாம் உனக்கு? இந்தஉலகமெல்லாம் எனக்குட்பட்டதுதான். நீயும்எனக்குட்பட்டவன்தான்: நீமட்டும் எப்படிதப்பித்துக் கொள்ளமுடியும்?உனக்கு உற்றார்உறவினர்யாருமில்லை: ஆதரிப்பாருமில்லை" என்றது. அதற்குநான் "எனக்குநானேதுணை—நான் உன்னை இனி லக்ஷியம் செய்யவும் மாட்டேன், உனக்குக்கீழ்ப்படியவுமாட்டேன்" என்று சொல்லி விட்டு எழுந்தேன்.

அங்கிருந்து ஹிமயமலைக்குச் சென்றேன். அவ்விடத்தில் ஜனங்களின் துணைகொண்டு ஏறக்கூடிய சிற்சில இடங்களை ஏறிப்பார்த்தேன். ஒரு நாள் சாயந்திரம் ஒரு மலைச்சார்பில் உட்கார்ந்து கொண்டு என்காலின் கீழிருக்கும் நகரங்களையும் கிராமங்களையும் கவனித்துக்கொண்டிருந்தேன். அப்பொழுது சாயந்திரவெயில் தங்கநிறமாய் மரங்களினுச்சியில் படிந்திருந்தது. கீழிருக்கும் வீடுகளிலிருந்து அவைகளின் சுவாசம்போல் புகை கிளம்பிக் கொண்டிருந்தது. இயற்கை சிருஷ்டிமுழுவதும் அம்பிகையின் உச்சுவாஸ நிச்சுவாஸத்தினால் மந்தமாய் அசைந்தாடிக்கொண்டிருக்கும் ஒரு விசித்திர வஸ்திரம் என்று அப்பொழுது தெளிவாய் விளங்கிற்று. ஒவ்வொரு வீட்டிற்குள்ளும் நம்மைப்போல் சுகதுக்கங்களில் அடிபடும் ஹிருதயத்தோடு கூடிய ஒரு ஆத்மாவுக்குக் குறைபாமலிருக்கிறதென்று யோசிக்கையில் மயிர்க்கூச்செடுத்து, அப்பொழுது என் தாயார் என் மனைவியை தேவிரூபமாக பாவித்துக் கொள் என்று சொல்லிய கடைசி வார்த்தை ஞாபகத்துக்கு வந்தது. அப்பொழுது என் மனைவியின் உருவம் என்னெதிரில் நின்றாற் போலிருந்தது. அவள்மேல் எனக்கிருந்த கோபமெல்லாம் பறந்துபோயிற்று. அதற்குப் பதிலாக அவள்மேல் எனக்கிரக்கமுண்டாயிற்று. ஐயோ பாவம்! அவளும் நம்மைப் போல் சுகப்படவழி தெரியாமற்றவிக்கும் ஆத்மாக்களில் ஒன்றே. நம்முடையதுக்கங்களுக்கு ஓய்வு சாவுதான். அப்படியிருக்க ஒருவர் துக்கத்தை ஒருவர் அதிகரித்தல் எவ்வளவு முட்டாள் தனம்! அதற்குப் பதிலாக ஏன் ஒருவர் கண்ணீரை ஒருவர் துடைக்க யத்தனம் செய்யக்கூடாது? நான் உட்கார்ந்திருந்தஉயரத்திலே கூட என்முன் காதில் கேட்கும் உலகத்தின் சந்தைக்கூச்சலெல்லாம் மனதுக்கு விரஸமாயிராமல் தங்கள் கஷ்டத்தைச் தெரியாது திணறிக்கொண்டிருக்கும் வாயில்லா ஜந்துக்களுடைய அபயக்குரல் போல் எனக்கே உருக்கத்தைக் கொடுத்தது என்றால், பகவானுடைய காதில் இந்த சப்தமெல்லாம் தங்களை ரக்ஷிக்கக்கோரும் பிரார்த்தனைகளாகக்கேட்கும் என்பதற்கு சந்தேகமென்ன? மனிதனுடைய அளவற்றஆசைகளையும், அவன் இடறிவிழுந்துகொண்டு செய்யும் அற்பப்பிரயத்தனங்களையும், அவைகளையும் நிறைவேறாது தடுக்கும் பிரதிபந்தங்களையும் நோக்கும் பொழுது எல்லாரும் ஒரே மண்ணினால் செய்யப்பட்டு தேவலோகத்திலிருந்து பூலோகத்துக்கு சாபத்தினால் தள்ளப்பட்ட தெய்வீக சகோதரர்களே என்று தெளிவாய் விளங்கிற்று. உலகத்தில் யாரோடு நமக்கென்ன சண்டை? இருக்கிறதெல்லாம் ஒரு கொட்டங்கச்சிக் குடுக்கை. உள்தேங்காயையெல்லாம் எறும்பு தின்றுவிட்டது. இதை உனக்கு எனக்கென்று மண்டையை உடைத்துக் கொண்டால் அது கீழே விழுந்து உடைந்து கொஞ்சம் உள்ளதும் சிதறிப்போகிறது! அப்படிக்கில்லாமல் நம் எதிரியைப் பார்த்து "அப்பா அந்தக்குடுக்கையை நீயே எடுத்துக் கொள். இன்னும் உனக்கு வேண்டிய அளவுகொடுத்து திருப்தி செய்ய என் கையில் இல்லையே என்று வருத்தப்படுகிறேன்" என்று சொல்லிவிட்டு நாம் விலகிவிடுவோமே! என்று யோசிக்கையில் அங்கிருந்து நேராக ஊருக்குப் போய் என்மனைவியை மன்னிப்புக் கேட்டுக்கொள்ளுகிறதென்று தீர்மானித்தேன். கையில் பணம் 10 ரூபாய்க்குக்குறைவாகத்தானிருந்தது. உடனே என் கையிலிருந்த மோதிரத்தை விற்று 25 ரூபாய் சம்பாதித்துக்கொண்டு ரயில் மார்க்கமாய்ப் புறப்பட்டு இரண்டு மாதத்துக்குள் ஊர் வந்து சேர்ந்தேன்.

நான் ஊர்வந்து சேர்ந்த பொழுது இரவு 9 மணிஇருக்கும். நிலவு இருந்தது. என் வீட்டு வாசலில் என் தம்பியின் குரல் ஹீனஸ்வரமாய்க் கேட்டது. வீட்டுக்குள் வெகு பேர்கள் ஸ்திரீகளும் புருஷர்களும் வந்து கொண்டும்போய்க் கொண்டுமிருந்தார்கள். நான் தலையை முக்காடிட்டுக் கொண்டு தெருவில் திரும்பித் திரும்பி உலாவிக்கொண்டே அவர்கள் சம்பாஷணையைக் கவனித்தேன்.

ஒருவர் "உனக்குக்கூட ஒருகடிதம் எழுதக்கூடாதா? இன்னஊரில் இருக்கிறுன் என்று தெரிந்தாலும் ஒருதந்தியாவது கொடுக்கலாமே?" என்றார்.

மற்றொருவர்: "தந்திஏன்? இருக்கிற இடம் தெரிந்தால் நான் போய் அழைத்து வரமாட்டேனா?" என்றார். இது என்மாமனார் குரல் என்றறிந்தேன்.

இதற்குள் ஒரு குதிரை வண்டி வாசலில் வந்து நின்றது அதிலிருந்து சட்டை தலைப் பாகை, கைப்பிரம்பு ஸகிதமாய் ஒருவர் இறங்கி உள்நோக்கிச்சென்றார். அவர் ஆஸ்பத்திரிவைதியர். திண்ணையில் இருந்தவர்கள் அவரைவாருங்கள் என்று உபசரித்து உள்ளே அழைத்துப் போனார்கள். நான் அவர்கள் பின்னால் உள்ளே போனேன்.

அங்கே ஒரு படுக்கையில் என் மனைவிபடுத்திருந்தாள். பக்கத்தில் என்மாமியார் ஒரு அழும் குழந்தையை வைத்துக் கொண்டு சமாதானப் படுத்திக் கொண்டிருந்தாள். அக்குழந்தை இரண்டு மாதத்துக்குழந்தை யாயிருக்கலாம். நான் என் தம்பியைத் தனியே அழைத்து என்ன சமாசாரம் என்று கேட்க விம்மி விம்மி அழுதான். அவனிடமிருந்து என் மனைவி பிரசவித்து ஒரு மாதத்திற் கெல்லாம் குளிர் காச்சல் கண்டு, முற்றி முறைஜ்வாரமாகி விட்டதென்றும் இப்பொழுது வைத்தியருக்கே இன்னது செய்கிறதென்று தெரியவில்லை யென்றும், என் மனைவி அடிக்கடி என்னைப் பற்றி "அவர் எப்போவருவார், ஒரு தந்தி கொடுங்கள்" என்று புலம்பிக் கொண்டிருப்பதாகவும் தெரிந்து கொண்டேன் பிறகு என் வரவை எல்லோரும் அறிந்து கொண்டார்கள். நான் படுக்கையண்டைபோய் உட்கார்ந்தேன். என் மனைவியைப் பெயரைச்சொல்லிக் கூப்பிட்டேன் (இதுவரையில் நன் அவளை அப்படிக் கூப்பிட்டதில்லை.) என் குரல் கேட்டதும் அவள் பிரமித்துக் கண்ணை விழித்துச் சுற்று முற்றும் பார்த்தாள். என் முகத்தைப் பார்த்ததும் அவள்கண்களில் நீர் ததும்பிற்று. எழுந்திருக்க முயன்றாள். மற்றவர்கள் "சிரமப்படாதே சும்மாயிரு" என்றார்கள் பிறகு அவள் மெதுவாய் "நான் கொடுத்து வைக்காத பாவியானேன்." என்றாள்.

"என்னை மன்னிக்கிறாயோ?" என்றேன்.

"உங்கள் பெருமையை அறியத்திறமையில்லை அற்பபுத்தி. எவ்வளவோ அபசாரம் செய்தேன். எல்லாவற்றையும் பொறுத்துரக்ஷிக்க வேண்டும்." என்றாள். அவள் கண்களில் ஜலம் பெருகியது.

"நானும் முரட்டுப் புத்திக்காரன். தாயின் புத்தியைக்கேளாத பிள்ளை. என்னை நீ முற்றும் மன்னிக்கவேண்டும்." என்றேன்,

"அந்த வார்த்தை சொல்லாதேயுங்கள். நான் உங்களுக்குத் தகுதியானவளல்ல. அதனால் தான் பகவானே இருவரையும் பிரித்துவிட்டார்." என்றாள்.

"அப்படியானால் பிழைக்கமாட்டாயோ;" என்றேன்.

"அவ்வளவு அதிர்ஷ்டமிங்கில்லை" என்றாள்.

பிறகு குழந்தையை என் கையில் ஒப்புவித்து "இதை என்னைப் போல் பாவித்துக் கொள்ளுங்கள்" என்றாள்.

"இன்னும் ஏதாவது வேண்டுமானால் தெரிவித்துக்கொள்" என்றேன்.

"என் மனதுக்கு இனி ஒன்றும் குறைவில்லை. உங்களை இனிக் காண்பேனோ என்று ஏங்கியிருந்தேன்; கண்டுவிட்டேன்; நீங்கள் இருக்கும்போதே நான் கண்மூடவேண்டுமென்று வேண்டிக் கொண்டிருந்தேன். அப்படியே கிடைத்து விட்டது. இது என்பாக்கியமே" என்றாள்.

பிறகு வைத்தியரை விசாரித்தேன். "இந்த ஜ்வரத்தை நம்பக்கூடாது, 20 நாளாய் இப்படியே இருக்கிறது. இன்று வேறு மருந்து கொடுத்திருக்கிறேன். இதன் குணம் காலையில் தெரியும்" என்றார். அன்றிரவு விடியற்காலத்தில் சுவாசம் நின்று விட்டது.

என்மாமனார், குழந்தைக்குப்பால்காரி வைத்துப் பால் கொடுத்து வளர்க்கக்கூடாதென்றும் தன்சமீப பந்துக்களில் பால் நிறைந்துள்ள ஒரு தாயினிடத்தில் கொடுத்து வளர்க்க ஏற்பாடு செய்வதாகவும் சொல்லி என் பெண்ணையும் பிள்ளையையும் அழைத்துக்கொண்டு போய் விட்டார்.

இதன் பிறகு என் ரஜாமுடிவில் நான் கச்சேரிக்குப் போய் வேலை ஒப்புக்கொண்டேன். தினம் காலையில் எழுந்து ஸ்நானம் செய்து சமைத்து சாப்பிட்டுவிட்டு மிகுதி சாதத்தை ராத்திரி சாப்பிட்டுக்கொண்டு இரண்டு மூன்று வருஷம் காலந்தள்ளினேன். பிறகு என் பெண்ணை எனக்குச்சமையல் வேலைகளில் உதவி செய்யும் பொருட்டு வரவழைத்தேன். அவள் எழெட்டு வயதுக் குழந்தையாதலால் பெருக்கி மெழுகிப் பாத்திரம் தேய்க்கும்வேலைகளை மட்டும் அவளைச் செய்யச் சொல்லி சமைக்கிறவேலையை நானே செய்து வந்தேன்.

அநேக தடவைகளில் என் மாமனார் "குழந்தைகளைப்பற்றி நீ கவலைப்படவேண்டியதில்லை. நீ மறுகலியாணம் செய்துகொள்" என்றார். "தங்கள் பெண்ணைப்போல் கள்ளங்கபடமில்லாதஸ்திரீ இனி கிடைக்கமாட்டாள். எனக்கும் இனிப்பார்க்கவேண்டிய அனுபவமொன்றுமில்லை. ஆதலால் அவளுடைய ஞாபகத்துக்குக்குறைவொன்றும் வராதபடி என் காலத்தைக் கழித்துவிடுகிறேன்" என்று சொல்லிவிட்டேன். மெட்றிகுலேஷன் பரீக்ஷைதேறின உடன் என்தாயார் இருக்கும்பொழுதே என்தம்பிக்குக்கலியாணம் ஆனதைப்பற்றி நான் உங்களுக்கு முன்னமேயே சொல்லியிருக்கவேண்டியது.

என்மனைவி இறந்த ஆறுமாதத்திற்கெல்லாம் என்தம்பி சட்டப்பரீக்ஷையில் முதல்வகுப்பில் தேறினான். பிறகு அவனுக்கு சாந்திகலியாணம் நடந்து அவனும் பட்டணத்திலேயே ஹைகோர்ட்வக்கீல் ஒருவரிடத்தில் ஒருவருஷம் வேலை கற்றுக்கொண்டு அங்கேயே குடித்தனம் செய்துகொண்டிருந்தான். அவனைப்பற்றி அடுத்த அத்தியாயத்தில் சொல்வோம்.

(இரண்டாம் பாகம் முற்றிற்று.)

# "FOUR DIMENSIONED BODIES."

"No power on earth could resist a throughly detached soul; it might almost be said to participate in God's omnipotence. Here lies the secret of the marvellous deeds of so many Saints."—Benedict Zimmerman on St. John of the Cross.

## "துரியகனவடிவு"

அமெரிக்கா தேசத்திலுள்ள ஐக்கிய மாஹாணங்களில் ஹார்வார்ட் யூனிவர்ஸிடியில், 11-வயதுள்ள பையனொருவன், மஹாபண்டிதர்களும் வித்யாவிற்பந்நர்களும் காலேஜ்ப்ரொபெஸ்ஸர்களும் நிறைந்தசபையில் "துரியகனவடிவு" என்னும் விஷயமாய் ஓர்அற்புதப்பிரசங்கம் செய்ததாகவும் அந்த அற்புதசக்திவாய்ந்த பையன், வெகு நன்றாகவும், தெளிவாகவும், உண்மை விளங்க பிரசங்கம் செய்தபோதிலும்; அவன் எடுத்து விவரித்த தத்துவங்கள் அங்கே கூடியிருந்த கணிதசாஸ்திரபண்டிதர்களுக்கும் மற்ற வித்யாவிற்பந்நர்களுக்கும் விளங்குவதரிதாயிருந்ததென்றும் பத்திரிகைகள் மூலமாய்த் தெரியவருகிறது. "துரியநிலைபெற்றோர்க் கரியதொன்றில்லை" யாதலால் இதில் அதிசயம் ஒன்றும் இல்லையே! இதுநிற்க.

"துரியமாய்" என்றால் என்ன? திருஞான ஸம்பந்தர் சரித்திரத்தைப்படித்தவர்களுக்கு இப்பையன் செய்த அற்புதச் செய்கை அசாத்திய மானதென்று தோன்றாது. ஏனெனில் மனம், ஜாக்ரஸ்வப்ன சுஷுப்தி யவஸ்தைகளை விட்டுத்துரியநிலை பெற்றால், அதற்கு விளங்காத தத்துவம் இல்லை. மாயைவலை தானே கழுவி விழுந்துபோகிறது. ஆகாசத்தில், ஸ்தூலாகாசம் என்றும் சூக்ஷ்மாகாசமென்றும், மஹாகாசமென்றும், பராகாசமென்றும், பரமாகாசமென்றும், ஐந்துவகையுண்டு. ஸ்தூலாகாசமென்பது ஜாக்ரத்தில் காண்கிறவிஷயங்களுக்கு இடம் கொடுக்கும் வெளி. இது நிகளம் அகலம் உயரம் என்னும் மூன்று அளவையுள்ளது இதற்குகனமுமுண்டு அந்தகனம்தான் பிருதிவியின் குணமாகியகடினம். கடினவஸ்துக்களுக்கு இடங்கொடுக்கும் இடவெளி ஸ்தூலாகாசம் எனப்படும். இது ஜாக்ராவஸ்தையில் புலனறிவுக்கு லக்ஷியமாய்த் தோற்றுவது.

சூக்ஷ்மாகாசமென்பது அகலம் நிகளம் என்னும்இரண்டளவையுள்ளது. இதற்குப் பரப்புகுணம் ஒன்று மட்டும் உண்டு. படத்திலெழுதிய சித்திரம்போல் எல்லாவிஷயங்களும் மனவெளியில்காணப்படும். இந்தவெளியைத்தான் சோமாகாசம் என்றும் சொல்கிறது. நிகளத்துக்கும் அகலத்துக்கும் இடையேயுள்ள பரப்பு வெளி கோணம் என்கிறசப்தத்துக்கு லக்ஷியமாய் விளங்கும். இந்தமனவெளியைத் தான்சொப்பனத்தில் நிகழும்சம்பவங்களெல்லாம் நேர்கின்றன. இதற்கு கந்தர்வலோக மென்றும் பேர். ஸ்தூலாகாசத்திக்கு பூலோகமென்று சொல்வதுண்டு. அதை யொட்டி யிதற்கு புவர்லோகம்என்றும் சொல்வார்கள். இதுவேஒருவிதத்தில் பிதிர் லோகமென்று சொல்வதுமாம். மூன்றாவது, நான்காவதான மஹாகாசமும் பராகாசமும், பிண்டத்தில் ஸ்தூலசூக்ஷ்மம் என்று சொல்லியதற்குச் சரியான அண்டத்தின் பகுதிகளாம்.

பாமாகாசம் என்று சொல்வது சுகவடிவான சுஷுப்தியாகாசமாம். கருவிகரணங்களெல்லாம் ஓய்ந்து விழுந்து போனவிடத்தில், அஹம்தத்துவம் தானேதானாயிருந்து இளைப்பாறிச்சுகம் நுகரும் இடம் பரமாகாசம் என்று சொல்லப்படும். இதற்கு பிண்டத்தில் சுஷுப்தி நிலை யென்றும் அண்டத்தில் ஸ்வர்க்கலோகம் என்றும் சொல்லப்படுகிறது. இதற்கு ஸுவர்லோகம் என்றும் சொல்லப்படும். இதற்கு ஒரே அளவை தானுண்டு. அது நிகளமாம். இதற்கு கதி யென்று சொல்கிறது. நற்கதி யென்றும் துர்க்கதி யென்றும் சொல்வது, நல்வினை தீவினைப்பயன் கொண்டு சொல்வதாம். இங்கே கர்மவிதி யொன்று மட்டு முண்டு. முற்பகல் விதைத்தது பிற்பகல் விளையுமானால், பிற்பகல் விளைந்ததை அறுவடைசெய்த கண்டுமுதல் காணும் களத்துமேடு இதுவாம்.

மனம் ஜாக்ர ஸ்வப்ன சுஷுப்தியென்கிற மூன்றவஸ்தைகளும் கடந்து நனவிற்சுழுத்தி யென்னும் நாலாவதவஸ்தையையடையும் பொழுது அது துரிய

வெளி தரிசனம் கண்டு தன்னை மறக்காது ஆத்மசக்தியோடும் அந்தர்முகமாயிருந்து வியவகரிக்கும். அந்தர்முகத்திலிருந்து அஹக்கண்ணால் பார்த்து பஞ்சதன்மாத்திரைகளளவாய் விளங்கும் காரணப்பிரபஞ்சத்தில் தன் வாசனாதேகத்தோடு சஞ்சரிப்பது துரியாவஸ்தையாம். இந்தத் துரியவெளியில் காணும் காட்சிகளுக்கு 'துரியக்காட்சி' யென்று பேர். இங்கே காண் பொருள்களுக்கு இடங்கொடுக்கும் வெளி நான்களவை யுள்ளதாயிருக்கும். அதாவது அகல, நீள, உயரம் இவைகளோடு வியாபகத்துவம் என்கிற ஒரு அதிசயகுணமும் விசேஷமாயுண்டு. இந்த வியாபகத்துவ குணத்தினால், ஸ்தூலசூக்ஷ்ம காரணப்பிரபஞ்சங்கள், மனதிற்கு இடையூறுகளாக வின்றி அவைகளெல்லாவற்றையும் ஊடுருவிச் செல்லும் சக்தி யொன்றிருப்பதினால், நூலிற் கோர்த்த மணிவடம் போல் அவைகளெல்லாம் துரியமனத்தில் ஐக்கியப்பட்டு விளங்குவனமாத்திரமாயிருக்கின்றன.

சிறைச்சாலையின் சுவர்களும் கதவுகளும், சிறைப்பட்டவனைத்தடுக்கச் சக்தியற்றபோது அதற்கு காராக்ரஹம்என்கிறபேர் பொருந்தாததாகி அது அஃதிற்கிடங்கொடுத்தஆகாசவெளியில் கரைந்து போனால்எப்படியோ, அப்படி ஆய்விடுகிறது. அப்படியே ஸ்வப்னங்களும் ஸ்வப்னமாத்திரமாயின்றி சூக்ஷ்மாகாச வெளியில் கரைந்துபோய் விளங்குகின்றன. காரணதேஹமான காரிருட்சுத்தமும் அதற்கு இடம்கொடுத்த பிரஜ்ஞானவெளியாம் (தற்போத) அறிவாகாசத்தில் கரைந்துபோய் விளங்குகிறது. இப்படியாக மூன்றவஸ்தைகளிலும் காணப்படுகிற ஸ்தூல, சூக்ஷ்ம, காரணப்பிரபஞ்சங்கள் அத்தன் ஆகாசத்தில், (உப்பினாலான பொம்மை சமுத்திரத்தில் கரைந்ததுபோல) கரைந்துசிற்க, இம்மூன்று ஆகாசங்களும் விளங்கும் திரிலோகங்களையும் ஊடுருவிச்செல்லும், துரியாகாசமென்னும் தற்போதமழிந்த பிரபோதசந்திர வெளிச்சம் இவைகளையெல்லாம் தத்துவார்த்தமாக விளக்கிக் காட்டுவதாய் நிற்கின்றது,

நிலா வெளிச்சத்தில் அஜ்ஞானசம்பந்தமாத்திரத்தால் பழுதை பாம்பாகவும், மரக்கட்டை கள்வனாகவும் தோன்றுவது போல, இந்தத் துரிய வெளிச்சத்தில் மாயா சம்பந்தமாத்திரத்தால் (அப்படி யென்றால், மனோசங்கற்ப மாத்திரத்தினால்) "த்ரிஜகத் சிருஷ்டி ஸ்திதி வ்யஸனகர்மகிருத்" என்னும் சுருதிவாக்கியத்திற் கிலக்காக திரிலோகங்களும் நீரிற் குமிழி போலவும், சமுத்திரத்தில் அலைகள் போலவும் தோன்றி மறைவதாய் விளங்குகின்றன. உண்மையாய்ப் பார்த்தால் இதுவும் முடிவான அவஸ்தையில்லை. ஏனெனில், திரிலோகங்களையும் சிருஷ்டித்தக் காத்து அழித்து அவற்றின் தன்மையை அறிந்து கொள்வதற்கானதோர் கொசப்பெட்டிக்குச் சமானமானதோர் இடமாம் இது. குயவன் தன்னையறிந்தபோதல்லவோ அவன்கிருதார்த்தனாவான். தன்னையறியாமல் திரிலோகங்களை சிருஷ்டித்தழித்துக் கார்க்கும் சக்தியிருந்தும் அவன் கர்மவலைக்குட்பட்டவனே யாவான்.

ஆனால் இந்த துரிய நிலை சித்திக்கப் பெற்றவர்களுக்கு பூலோகம், புவர்லோகம், ஸுவர்லோகம் என்கிற மூன்று லோகங்களிலும் அவர்கள் அறிவுக்கெட்டாத வஸ்துக்களும் தத்துவங்களுமில்லை! ஆதிசங்கரைப் போல் மஹான்களாக அவதரித்த மஹாபுருஷர்கள் இந்தத்துரிய நிலையிலிருந்தே லோகரக்ஷணார்த்தமான எல்லா வேலைகளையும் செய்து வந்தார்கள். அவர்கள் எடுத்த தேகம் பிராரப்ததேகம் அல்ல. பிராரப்ததேகம் என்றால். முன் செய்த கர்மபலத்தால் உற்பவித்த தேகம் என்றுபொருள் படும். பிராரப்ததேகம் எடுத்தவர்கள் தாங்கள் புசிக்கவேண்டியுள்ள கர்மபலனைப் புசித்தே தீரவேண்டும். ஆனால் பிரஹ்ம வித்துக்களாகி வரியன. வாரியன் விராட் என்னும் பதவிகளிலிருக்கும் யோக சாதனங்களால் சித்தி முத்தி பெற்ற சித்தபுருஷர்கள் தங்கள் இச்சாமாத்திரத்தினால் கல்பகாலத்தில் தங்களுக்கு இஷ்டமான வரையில் அல்லது கல்பகால முழுவதும் கூட விதேஹகைவல்யம் பெற்றும் ஸதேஹிகளாயிருந்து லோகபரிபாலனார்த்தம், ஸத்துக்களுக்கும் சாதுக்களுக்கும் மட்டும் தரிசனமளித்து அவர்களை நல்வழிப்படுத்தி நற்கெதியடையச்செய்து, அவர்கள் மூலமாய் மனுகுலத்துக்குக்ஷேமத்தையும் நற்கெதிக்கு வேண்டிய சாதனங்களையுமளித்து உதவி புரிவார்கள்.

இப்படி கர்மதேஹத்தோடுபிறந்தும் கர்மபந்தத்தை அத்வைதஞானத்தீயால் எரித்துச் சாம்பலாக்கிச் சுட்டபடம்போல், கர்மபெந்தம் நீங்கிய தேஹத்தோடு கூ

டியமஹாபுருஷர்கள் அவர்களுடையபிராரப்தகர்மம முடிந்ததும், கர்மதேஹம்கழன்றுபோகஅதைவிட்டொழித்துத், தோலுரித்த பாம்புபோல், அவர்களுடயதிவ்ய தேஹத்தோடு மாத்திரமிருந்து ஈசுவர சங்கல்பத்தை முடித்துவைப்பவர்களாய் விளங்குவார்கள். இவர்களுக்கு சித்தர்கூடம் என்றும், சித்தர் கணம் என்றும் பேர். இவர்களுக்கு வியஷ்டி பாவமென்பது சற்றுமில்லையால் சமஷ்டி பாவத்திலிருந்தழைப்பவர்களுக்கு மாத்திரமே இவர்கள் அந்தந்த சமஷ்டிபாவனு விஷயங்களிலுறையும் அதிஷ்டான தேவதைகளின் அம்சங்களாகவும், அந்த அதிஷ்டானத்தற்கும் அதிஷ்டானமான ஸ்வயம்பிரகாசமாகவுமிருந்து பக்தியினல் பரிசேவை செய்வார்களை யாதரித்து ஈடேற்றுவார்கள். இது விஷயமாய் ஒரு உதாரணம்:—

தற்பொழுது ஸ்ரீ ஸ்ருங்கேரி ஜகத்குருவாக விளங்கும் மாஹாபுருஷரான ஸ்ரீமத் சங்கராச்சாரிய ஸ்வாமிகள், ஸ்ரீமத் ஆதிசங்கராசாரியரவர்களுக்கும் ஸ்ரீ ஸாரதாம்பாளுக்கும் அவர் அவதரித்த காலடி கிராமத்தில் திவ்யாலயம் கட்டி அவர்கள் விகாஹங்களைவைத்து பிராணப்பிரதிஷ்டை செய்யவேண்டிய ஏற்பாட்டுக்கு அவர்உடனிருந்துதவவேண்டுமென்று, அதல் முன்னின்றுழைத்த மைசூர் சீப் கோர்ட் சீப் ஜட்ஜாயிருந்து தற்காலம் குருபக்தகேசரியென்னும் பட்டப்பேர் பெற்றுவிளங்கும். ஸ்ரீ வ. இராமச்சந்திரய்யரவர்கள், ஜகத்குரு அவர்களை மன்றாடிக் கேட்டுகொண்டபோது, அம்மஹா பெரிய காரியத்திலும் தான் கர்த்திருத்துவம் பாராட்டி நுழைடக்கூடாதென்று, அதற்கும் எனக்கும் ஒருசம்பந்தமுமில்லை ஆனல் நீர்மேற்போட்டுக் கொண்டுழைக்கும் அந்த ஸத்காரியம் இனிது முடியவேண்டுமென்றுநான் பிரார்த்திப்பேன், என்று சொன்னர் இதிலே யிருக்கிறது கர்மத்தின் இரகசியம்.

நம்மவர்கள் சாணளப்பான் பூச்சிபோல இந்த எண்சாணுடலைக்கொண்டு எல்லாக்காரியமும் சாதித்துவிடவேண்டுமென்கிருர்கள். மஹான்களுக்கு இந்த எண்சாணுடலைக்கொண்டு சாதிக்கவேண்டிய காரியம் வேறு. அவர்களுக்கு —

"உடம்பினைப்பெற்ற பயனவதெல்லாம்
உடம்பினில் உத்தமனைக்காண்."

என்னும் ஔவை வாக்கே உத்தமோத்தமமானது. ஆகையால் அழிந்தபோகும் இந்த எண்சாணுடலைக் கொண்டு அதிலுள்ள புரியஷ்டக சூக்ஷ்மசரீரத்தைப் பிரித்துபிறகு அதிலுள்ள காரணதேஹத்தைப்பிரித்து அதிலிருந்த துரியவடிவோடு விளங்கும் திவ்யதேஹத்தைப்பெற்று, ஸ்தூல, சூக்ஷ்ம, காரணதேஹங்கள் மூன்றிலும் ஒட்டியும் ஒட்டாமல் விளங்கப் பிரயத்தனப்படும் அவர்கள் இந்த அற்பகாரியங்களில் மனதைச் செலுத்தி அந்த மஹாகாரியத்துக்குக் குந்தகம் விளைத்துக்கொள்ளார்கள். பத்திரிகைக்கெழுதும் நிருபர் ஒருவர், தற்காலத்திருக்கும் ஜகத்குருவுக்கு முன்னிருந்த மஹான் ஜனக்ஷேமத்துக்கு என்று ஒன்றும் செய்யாது வாளாவிருந்தாரென்று அபசாரம் பேசியிருக்கிறர். ஐயோ! அந்த மஹாபுருஷர் சித்தவடிவோடு இன்னும் விளங்குவதையறிந்தவர் யார்தான், இவர் புன்சொல்லைப் போற்றி யங்கீகரிப்பர். அந்தமஹாத்மா இடைவிடாத ஸமாதியிலிருந்த விளங்குவர், இந்த ஏழை விரகறியாத வாலிபனயிருந்தபொழுது அந்த மஹாபுருஷருக்குத் தேஹபணிவிடை செய்தவரும் பாக்கியம் பெற்ற தனது ஜநகபிதாவின்பேரில் அவர் கொண்ட கிருபையினல், இந்த ஏழையைச்சமாதியிலிருந்து விழித்ததும் பார்த்து, "வெங்கடரமணயை ஹொடேகா!" என்று அறிவிக்க கருணைபூரித்துப் பார்த்தமோர் பார்வை, பசுமரத்தாணிபோல் இவனுள்ளத்துப்பதிந்துகிடக்க, உபதேச குருவையிழந்து தவித்த காலத்தில், அம்மஹான் சித்தகுருவாகவந்து ஆசிர்வதித்து அபயப்பிரதானம் கொடுத்து, மூடமாய் பக்தி மாத்திரம் மிகுந்துள்ள அவரது ஊழியனுக்குத் திவ்ய தரிசனமும் கொடுத்து பூர்ணனுக்ரகமும் செய்து விளங்கிய உண்மையையும், அந்தப்படியே பின்னல் பலித்ததையும் நினைக்கில், அச்சோ! அம்மஹாபுருஷனை வீணே காலம் தள்ளினவரென்று சொல்லும் வார்த்தையைக்கேட்கவும். கர்ணகடூரமாயிருக்கிறதே! ஆயினும் அறியாமையினற் சொன்னதை அதிகமாய்ப் பாராட்டத்தக்கதல்ல! ஆதலால்,

"உற்று நின்றுரோடு மத்தருசோதியைச்
சித்தர்களெனறும் தெரிந்தறிவாரில்லை
பத்திமையாலே பணிந்தடியார் தொழ
முத்திகொடுத்தவர் முன்பு நின்றுனே!"

என்னும் திருமந்திரத்திற்கு இலக்காய் விளங்கிய அம்மஹாத்மாவின் பொன்னடிகளைப் பூஜித்து உள்ளத்திருத்தும் பாக்கியம் பெற்றநாம் அத்திருவடிகளையே பின்னும் தொழுது இதை இங்கு முடிப்போமாக. ஓம் தத்ஸத்

---

## The Cause of Righteousness.

### "தர்மம் சர".

### முற்கால தற்கால நிலைமை.

ஸ்வதர்ம லக்ஷணம்.

* (By A. S. Visvanatha Iyer Sub-Registrar.)

மானிடரின் விருத்திக்காகக் கருணைக்கடவுள் பல காலங்களில் செய்தருளி யிருக்கும் லீலைகள் வியக்கத் தக்கன. குருக்ஷேத்திர யுத்தகாலத்தில் ராஜாங்க முறைமைகளும் குடிகளின் காரியங்களும் தாழ்வடைந்திருந்தன. பாரதயுத்தவியாஜமாகச்சீர்கேடடைந்த குடிகளையும் மன்னவர்களையும் மரிக்கச்செய்து மீதியுள்ள நல்லவர்களுக்குப் பாண்டவர்களை ராஜாவாக்கி உலகத்துக்கு நன்மைபுரிய ஸ்ரீ கிருஷ்ணபிரான் அருள் புரிந்தார். அதற்காகத்தான் பன்னிரண்டு வருஷ வனவாஸமும் ஒருவருஷ அக்ஞாதவாஸமும் பாண்டவர்களுக்கும் பாஞ்சாலிக்கும் ஸம்பவிக்கச்செய்தார். பன்னிரண்டு வருஷகாலம் வனவாஸத்தில் ஈச்வர சிருஷ்டியின் இயற்கை அமைப்பையும் அவ்வமைப்பின் அழகு மஹிமையையும் அவைகளின் தத்துவங்களையும் கஷ்டவாஸம் செய்வதினாலும் அதினாலுண்டாகும் தீர்க்காலோசனையினாலும் பஞ்சபாண்டவர்களும்பாஞ்சாலியும் ஸ்வானுபவத்தில் செவ்வையாயுணர்ந்து அனுஷ்டானத்தில் அப்பியஸித்துப் பிறகு ராஜ்யமுறைமைகளில் அவைகளைத் திடனுக்கத்தோடமைத்து நீதிராஜ்யம்புரிந்து உலகினர்களை ஸுகிகளாக்கவேண்டிய பக்குவத்தை ஸ்ரீகண்ணபிரானின் கிருபையால் அடையப்பெற்றார்கள். அப்படியான வனவாஸத்தில் கடைசிச்சருக்கத்துக்கு முந்தியது "பழம் பொருந்து சருக்கம்" என்பதே. அதின் கதையாவது:—

பாண்டவர்களும் பாஞ்சாலியும் அவர்களின் பிரயாணத்தில் ஒருரமணீயமான இடத்தில் ஒரு அற்புத நெல்லிமரத்தையும் அதில் ஒரு மனோகர நெல்லிக்கனியையும் பார்த்தார்கள். துரோபதை அப்பழத்தை இச்சிக்கவும் அர்ச்சுனன் அதை உடனே அவளுக்குக்கொய்து கொடுத்துவிட்டான். பிறகு அவர்கள் சிறிது தூரம்போனதும் ஒரு ரிஷி தபசுசெய்துகொண்டிருப்பதையும் அருகாமையில் சில குடிசைகளில் வேடர்கள் அழுதுகொண்டிருப்பதையும் கண்ணுற்றுக் காரணம் கேட்கவும், அவ்வேடர்கள் அந்நெல்லிமரம் வருஷத்திற்கு ஒருதரம் பழுத்து அம்முனிக்கு, தானேவிழுந்து ஆகாரமாகும் என்றும், அதைவாயில் அண்ணாந்து வாங்கிப் புசித்து ஜீவித்து அந்த ரிஷி தபசுசெய்கிறார் என்றும், அப்பழமுண்ணும் முறை அன்று இன்னும் சில நாழிகைக்குள் என்றும், தங்களுக்கு அரசன் அளித்திருக்கும் மான்னியத்துக்காக அதை அந்தரிஷிக்குப் பாதுகாத்துக்கொடுக்கும் பணிவிடையாட்கள் தாங்கள் என்றும், அதை யாருடைய அம்போ பறித்துப்போனமையால் தாங்கள் பரிதபிக்கிறதாகவும் சொல்லவே, பாண்டவர்கள் நடுநடுங்கினார்கள். துரோபதை, தன்பெண்புத்தியினால் அப்பழத்தைக்கேட்டதை நினைத்துக் கண்ணீர் சொரிந்தாள். அருச்சுனன் அகமுடையாள் கேட்டதும், அது யாருடையது, அதைத் தான் கைக்கொள்ளலாமா என்பதைக்கூட விசாரிக்காமல் அதை உடனே பறித்துக்கொடுத்த தன் மதியீனத்தை உணர்ந்து வெட்கமும் வியாகூலமும் அடைந்தான். அவனுடைய மற்ற சகோதரர்களும் வியஸனத்திலாழ்ந்தார்கள். கடைசியில் இக்காரிய ஸம்பவத்தின் உண்மையைத் தெரிந்தசாஸ்திரக்ஞனாகிய சகாதேவன், துவாரகாபுரிவாஸனாகிய தங்கள்நேயன் கிருஷ்ணனைத் துதித்து அவரைக்கூப்பிட்டால் அவர்வந்து யோஜனையும் ஒத்தாசையும் புரிவர் என்று மற்றவர்களுக்குச்சொல்லவும், எல்லோரும் அப்படியே கண்ணனைக் கரைந்துருகி நினைத்து ஸ்துதித்துக்கூப்பிட்டார்கள். உடனே அக்கிருபாநிதி அவ்விடம் தோன்றினார். நிகழ்ந்த காரியத்தின் நிமித்தம் தங்களுக்கு ஒருதீங்கும் வராதவண்ணம் தங்களைக்காக்க, பாண்டவர்களும்பாஞ்சாலியும் அவரைவேண்டினார்கள். கபடநாடகசாரியாகிய எம்பிரான் அவர்களைப்பார்த்து அவர்கள்மனதில் உள்ள உண்மையை அவ்வாறுபேர்களும் உள்ளபடிசொன்னால் அற்றுப்போன அந்த நெல்லிக்கனி ஒவ்வொருவர் உற்றது உள்ளபடிசொல்லுதலுக்கும் ஆறிலொருபங்கு உயரம் எழும்புமென்றும், கடைசியில் 6வது துரோபதையினுள்ளம் வெளியானதும் அக்கனி அம்மரத்தில் முன்போலவே ஒட்டிவிடுமென்றும் திருவாய்மலர்ந்தருளினார். உடனே எல்லோரும் சந்தோஷமடைய, தருமர் சொல்லலானார்:—

*Read before the T. S. Conference hold at Tiruvalur.

"ஸத்தியம் மாதா. பிதாக்ஞானம், தர்மோப்ராதா, தயாசகா, சந்தி பத்நீ, க்ஷமாபுத்ர: ஷடைதேமம் பாந்தவா:"—"அதாவது,ஹேகிருஷ்ணு! உமதுகருணையால் நாங்கள் இனிராச்சியம்திரும்பப்பெற்று அதைநாங்கள் ஆளப்பாக்கியம் கிடைத்தால் அப்பொழுது எங்கள் ராஜ்யத்தில் தாய்மார்கள் அவர்களின் குழந்தைகளுக்கு ஸத்தியத்தை புகட்டும்படியான மஹிமையுடைய யவர்களாக ஆகவேண்டியது என்றும், பிதாமார்கள் தங்கள் குழந்தைகளுக்கு ஓம் ஹரிஃ ஓம் நமோ நாராயணயவித்தம் என்று தொடங்கி ஈஸ்வரக்யானம் பொருந்திய படிப்பைப் புகட்டவேண்டியது என்றும், சகோதரர்கள் ஒற்றுமைப் பட்டுப் பிரியத்தோடு கூட்டுறவாடித் தர்ம காரியங்களைச் செய்யஹேதுவாகவேண்டியது என்றும். ஸ்நேகிதர்கள் அவர்களின் எவ்வித நிலைமையிலும் தொழிலிலும் ஒருவருக்கொருவர் தயையோடுகூடி ஒத்தாசை புரிந்து கொண்டிருக்கவேண்டியது என்றும், பத்நிமார்கள் வீட்டுவேலையோடுகூட வெளிவேலைகளிலும் பிரவர்த்தித்திருக்கிற தங்கள் கணவன்மார்களுக்கு இல்லறத்தைச் சாந்தமயமாகப் பண்ணிக்கொண்டிருக்க வேண்டியது என்றும், புத்திரர்கள் அவர்கள் செய்யும் காரியங்களுக்கு அவர்களின் பெற்றோர்கள் கிழவயதினுலும் நவநாகரீக அறியாமையினுலும் வேறுபட்டுப் பேசினும் செய்யினும் அம்முதியோர்களிடத்தில் பொறுமையோடு கூடியவர்களாய் இருக்கவேண்டியது என்றும் நான்பறையடிப்பித்துச் சட்டம்செய்வேன். அவைகளுக்குக்கீழ்ப்படிந்து நடப்பவர்களைத்தான் பந்துவாக நான் எண்ணுவேன். அப்படிக்கல்லாமல் எனது ராஜ்யத்தில் ஜனங்கள் மேல்குறித்த ஆறுவிதநிலைமைகளிலும் வேறுவிதமாக நடப்பார்களானல் அவர்களை எனது பகைவர்களாக எண்ணி அவர்களுக்குத் தெண்டனைபுரிவேன். இதுதான் நான்செய்ய இருக்கும் ராஜாங்கத்துவமர்மம் என்றார் பழம் ஆறிலொரு உயரம் கிளம்பிவிட்டது.

பிறகு பீமன் யாசகார்த்தமன்னியிலும் ரணமன்னியிலும், எல்லோரும் ராஜ்யத்தில் மானத்தோடு ஜீவனம் நடத்தவேண்டியது என்பது தனதுண்மை என்ருன்.

அர்ச்சுனன் அதர்மத்தைக்காணும் சந்தர்ப்பங்களிலெல்லாம் தர்மயுத்தஞ்செய்து நியாயஸ்தாபனஞ் செய்யவேண்டியது என்பது தனது கோரிக்கை என்ருன்.

நகுலன் தர்மசங்க்ரஹமே செய்யவேண்டிய காரியம் என்பது தனது கொள்கை என்ருன்.

பழமும் மொத்தம் மூணில் இரண்டுபங்கு உயரமெழும்பிவிட்டது.

பிறகு சாஸ்திரக்யானியாகிய ஸகாதேவன்:மாத்ருவத் பரதாராம்ச்ச பரத்ரவ்யானிலோஷ்டவத் ஆத்மவத் ஸர்வ பூதானி, யஃ பச்யதிஸ பச்யதி:—"பிறனுடைய பத்நீமார்களை தாய் அல்லது ஸகோதரிகள் போலப் பாவிப்பதும், சட்டப்படிதனக்கு இல்லாத ஸொத்துக்களை எட்டிக்காய்போலச் திரஸ்கரிப்பதும், தன்னைப் போல எல்லா மன்னுயிர்களையும் எண்ணுவதும் ஆகிய இம்மூன்று காரியங்களையும் எவன் ஸ்வானுபாவத்தில் உணர்ந்து அனுஷ்டிக்கிருனே அவன் மோட்சத்தைப் பார்க்கிருன் என்பதே தனது அந்தரங்கம் என்ருன். ஸகாதேவ பிரும்மக்யானி அதுசொல்லலுமே அப்பழம் குதூஹலித்து ஒரு பங்கு உயரம் கிளம்பிவிட்டது

இன்னும் ஆறிலொருபாக உயரம் பாக்கியிருக்க, பகவான் துரோபதையைப் பார்த்தார். உனது மனோரஹஸ்யத்தை வெளியிடு என்று ஆக்ஞாபித்தார். அப்பொழுது அருந்ததியனைகளாகிய துரோபதை சொல்வாள்:—"ஐம்புலன்களும்போல் ஐவரும்பதிகளாகவும் இன்னும் வேறொருவன் என்பெருங் கொழுனனுவதற்கு உருகிற்று இறைவனே எனது பேர்ஹிருதயம். அம்புவிதனிர் பெண்பிறந்தவர் எவர்க்கும் ஆடவரிலாமையின், நம்புதற்குளது" அதாவது:—ஹே? ஹிருதயவாஸா! எனதுகல்யாணகாலத்தில் ஸ்வயம்வர மண்டபத்தில் எனக்கு பஞ்ச இந்திரியங்களைப்போல ஐந்து புருஷர்கள் பதிகளாக பிராமண வேஷம்பூண்டு வந்திருக்க, க்ஷத்திரியவர்க்கலத்தில் கல்யாணமண்டபத்தில் நாட்டப்பட்டிருந்த மத்ஸ்யக்குறியை அடித்துத்தள்ள அநேகமாய் எல்லாரும் அசக்தர்களாகித்தோற்றுப்போனர்கள். அப்போதுகர்ணன்கடைசியாக க்ஷத்திரியவர்க்கத்தில் கிளம்பிக் கீழேசுற்றிக் கொண்டிருந்த யந்திரத்தின் வழியாய் வில்லை நாணேற்றித் திடமாய்விட்டுக் கம்பீரமாய் அக்கல்யாண சபையில் நின்ருன். அது கண்ட நான் ஸ்திரிகளுக்கு இயற்கையாய்

உள்ள பேதமைப் புத்தியினாலும் தீர்க்காலோசனையின்மையினாலும், க்ஷத்திரியகூட்டத்தில் கடைசியாக எழுந்தவன் கர்ணன் ஆனபடியாலும், பிராம்மணர் குழாத்தில் மத்ஸ்யயந்திரத்தை அடிக்கும் தீரன் இராண் என்கிற எண்ணத்தாலும் கர்ணன் விட்ட அம்பு, நாணேற்றிவிடப்பட்டமாதிரியிலிருந்து மத்ஸ்யக்குறியை ஆகாயத்தில் நிச்சயமாய் அடித்துவிடும். அது திண்ணம் என்று உடனே பெண்பாலாகிய நான் நிச்சயித்துஉடனேமனதினால்அவனைப்பர்த்தாவாகஸ்மரித்து அவனைக்காதலித்துப் பார்த்து நான் குதூஹலிப்படைந்தேன், என்னுடைய அனுபவமே இப்படியிருக்கும் போது ஸ்திரீகள் ஆண்பிள்ளைகளுக்கு ஸமானமாக மூளைப்ரவிருத்திலும் புத்தியிலும் பாவிக்கப்பட்டு நல்லவர்களும் கெட்டவர்களும் அமைந்த புருஷர்கள் நடுவில் ஸ்வேச்சையாக விடப்படக்கூடாது என்பது தனதுகொள்கை என்றும், அப்படி விடப்பட்டால், மானஸீகத்தில்கூடக் கற்பமையவேண்டிய ஸ்திரீகளின் பதிவிருதாதருமத்தில் தனக்கு நம்பிக்கை வராது என்றும், அவ்வுத்தமி துரோபதை கூறி மேலும் கிருஷ்ணனை நோக்கி "அன்று துயிலுரிந்தகாலத்தில் என் மானங்காத்தரக்ஷகா, எனது பர்த்தாக்கள் ராஜ்யம் திரும்ப வஹிக்க உமதுகடாக்ஷம்பெற்றால், ராஜ்யத்திலுள்ள ஸ்திரீகள் உயர்ந்த இல்லற தருமத்துக்குப் பாக்கியவந்தர்களாகப்பால்யத்தில் பெற்றோர் முதலியவர்களின் மேன்பார்வையிலும், பிறகு பர்த்தாவின் ஆக்கியத்திலும், பிறகுமுதிர்ந்த வயதில்கூடப்பிள்ளைமார்கள் போன்றவர்களின் ஆதீனத்திலும் இருக்கவேண்டியது என்று ராஜ்யத்தில் நிபந்தனை ஏற்படுத்த என்பர்த்தாக்களை வற்புறுத்துவேன்" என்று அவளின் மனோரஹஸ்யத்தை எடுத்துக்கூறலும் பழமும் அதினிடத்தைச்சேர்ந்துமுன்போல ஒட்டிற்று.

பாண்டவர்களும் பாஞ்சாலியும் கண்ணன் அனுக்ரஹத்துக்கு நன்றிபாராட்டிப் பரவசமடைந்தார்கள். அப்பொழுது கண்ணனும் நீங்கள் ஒவ்வொருவரும் உங்களில் உற்றதைச் சொன்னபடியால் அற்ற அக்கனி முறையே உயரக்கிளம்பி மரத்தில் முன்னிருந்தபடி ஒட்டிற்று என்று சொல்லி அவர்களிடம் விடைபெற்றுத் திரும்பினார். அது பாண்டவர்களுக்கு அவர்களில் ஒவ்வொருவரும் ராஜாங்க தத்துவங்கள் என்று அவர்கள் உள்ளத்தில் உள்ளபடி வெளியிட்டவைகளையெல்லாம் ஒன்றுசேர்த்து, அவர்களுக்கு அக்காலம் அற்றுப்போய்ச் சீக்கிரம் திரும்பக் கிடைக்க இருக்கிறராஜ்யத்தில் அக்கால அத்தேச அக்குடிகளுக்கு ஏற்றபடி ஊர்ஜிதமாய்க் கையாண்டு ராஜ்யபரிபாலனம் செய்தால் அதின் பலனாகிய ஜனசமூக க்ஷேமகரமாகிய பழம் நிச்சயமாய்ப் பாண்டவர்களுக்குப் ப்ராப்தலப்தமாகப் போகிறது என்பதைக் கிருஷ்ணபகவான் சூசிப்பித்துக் காட்டினதுபோலப்பட்டது.

பிறகு "நச்சுப்பொய்கை" வனவாஸத்தின் கடைசிச்சருக்கம். அதில் உயர்தர ராஜாக்கள் ராஜ்ய லெட்சுமியால் மதியீனர்களாகாமலிருக்க வேண்டுமென்றும், ராஜ்யஸம்பத்து அநித்தியமென்றும், அது ஆளுபவரின் சௌகரியத்துக்காக அமைந்ததல்லவென்றும், ஆகையால் அரசர்கள் நடுவு நிலைமையில் எப்பொழுதும் திடமுள்ளவர்களாய் இருக்கவேண்டியது என்றும் வற்புறுத்துகிறது. பிறகு அக்ஞாதவாஸ ஒரு வருஷத்தில் பாண்டவர்கள் அக்காலவர்த்தமானத்தைச் செவ்வையாய் ஸ்வானுபவத்தில் அறியவேண்டி அவர்களின் ரூபத்தை மறைத்துச் சாதாரண ஜெனங்களைப் போலக்கஷ்டப்பட்டு ராஜ்ய காரியங்களுக்குத்தயாரானார்கள்.

விராடதேசத்தில் தருமன் அக்கால ராஜாங்க மர்மங்களை அறியக் கோர்ட்டு மந்திரியாகவும், பீமன் அக்காலவிளைவு திட்டத்தையும், போஜன பக்குவத்தையும் அவைகளினால் மனிதர்களுக்குள்ள விருத்தியையும் தெரிந்துகொள்ள பாகசாலை எஜமானனாகவும் இல்லற தர்மத்திற்கேற்றபடி பெண்குழந்தைகள் எப்படிப் பழக்கப்படுகிறார்கள்என்பதை உணர ராஜபுத்ரி உத்தரைக்கு அருச்சுனன் நபும்ஸகவாத்தியாராகவும், அக்காலயுத்தநிலைமையையும் அதின் விபரத்தையும் சட்டத்தையும் நிர்ணயிக்க நகுலன் குதிரைப்படைத் தளகர்த்தனாகவும், மனிதனின்பக்குவத்துக்கு இன்றியமையாததாயிருக்கிற பசுக்கள் முதலியவைகளினுண்மையை அறியச் சகாதேவன் இடையர்களுக்குத் தலைவனாகவும், அக்கால அந்தப்புர ரஹஸ்யங்களை அறியத்துரோபதை விராடராணியின் தோழியாகவும் அமர்ந்தார்கள். அப்படி ஒருவருஷம் அந்நிலைமைகளில் கஷ்டப்பட்டு ராஜ்யபாரம் வகிக்கத்தயாரானார்கள். பாரதயுத்தம் முடிந்தப்பிறகு தங்களுக்குக் கிடைத்த

ராஜ்யத்தை மேற்சொன்ன முறைமைப்படி அரசாண்டார்கள். அவ்வரசு ஓங்கிப் பிரகாசித்தது. அவ்வரசில் குடியும் ஓங்கிச்செழித்தது.

### தற்கால லக்ஷனம்.

இந்து ஆரிய சகோதரர்களே! தற்காலத்திய ராஜாங்கத்தில் உயர்ந்த பதவிக்குத் தூக்கிவிடப்பட முறையிடும் நாம் எப்படியிருக்கிறோம் பார்ப்போம். நம்முடைய மாதாக்கள் குழந்தைகளுக்கு ஸத்தியம் புகட்டும் நிலைமையில் இருக்கிறார்களா? குசேலரின் ஸம்ஸாரம் கணவனால் ஞானம் போதிக்கப்பட்ட அவர்களின் குழந்தைகளுக்கு உயர்ந்த ஸத்தியமாகிய கிருஷ்ணனை அடையும்படி செய்யக் குசேலரைக் குழந்தைகளின் பூணூல் நிமித்தம் கிருஷ்ணனிடம் போய் வாரும் என்று மன்றாடினாள். அவளுடைய மஹிமை பொருந்திய கருத்தை அறியாத கணவன் தன்னைத் தன் பத்தினி யாசகத்துக்குக் கிருஷ்ணனிடம் ஏவினதாகவே எண்ணிக் கிருஷ்ணனிடம் சென்றான். அவ்வித மஹிமை வாய்த்த ஸ்திரீகள் இப்போது ஏன் நம்மவர்களில் இல்லை; அவர்களை அக்ஞானத்தில் அமிழ்த்திவிட்ட நாமே அதற்குக் காரணம்.

பிறகு தற்காலப் பிதாமார்களைக் கவனிப்போம். தான் பெற்றெடுத்த குழந்தைகளுக்கு ஈசுவரஞானம் பதிந்தபடிப்பைப் புகட்டுவது தன் கடமை என்றுகூட எண்ணாமல் அவர்களின் படிப்பைப் பிறர்கையிலும் அன்னிய மதஸ்தர்கள் பள்ளியிலும் ஒப்பிவித்துவிட்டார்கள். அதனால் மூளைப்பிரவிருத்தியின் புத்திகூர்மைமாத்திரம் விசாலிக்கப்பெற்ற நம்மவர்கள் ஸன்மார்க்கமும், தர்ம்மமும், நீதியுமுள்ள காரியங்களை அவமதித்துத் தங்கள் தங்களின் லௌகிகச் செல்வாபிவிருத்தியிலே மாத்திரந்தான் நோக்கமாயிருக்கிறார்கள் என்பது தற்காலப் படிப்பின் பலனாக ஆகிவிட்டது.

தற்கால சகோதரர்களைக் கெவனிப்போம். ஒற்றுமையிழந்து தர்ம சிந்தையற்று அதினால் சச்சரவு மேலிட்டு காப்பிக்கிளப்புகளுக்கும் சிவில் கோர்ட்டுகளுக்கும் சொத்தின் பெரும் பாகத்தைப்பகிர்ந்து அவர்கள் ஏழைமைப்பட்டுப் போகிறார்கள். உண்மையில், உதாரணமாக, இத்தஞ்சைஜில்லாவில் திருவாரூர் ஸ்டேஷனிலிருந்து தஞ்சை மாயூரம் வழியாய் இவ்விடம் சேரும் ரயில்பாதைக்கு இருபுறத்திலும் மூன்று மைல் தூரத்துக்குள்ளிருக்கும் கிராமங்களை எடுத்துக்கொள்ளுவோம். மெட்ரிகியுலேஷனுக்கு அநேக வருஷங்கள் போய்ப் பரீட்சையில் தவறி ஜோடு, குடை யன்னியில் வெளியில் புறப்படத் தெரியாதவர்களாகி இவர்கள் ஐஸ்வரியத்தில் கோட்டை கட்டுவார்கள் என்கிற தப்பெண்ணத்தினால் இவர்களின் தகப்பன் அண்ணன்மார்கள் அவர்களின் அற்ப சொத்தின் பெரும்பாகத்தை இவ்விழவு படிப்புக்கு வாரி யிறைத்து வீணுக்குச் செலவழித்த அதின்பலனாக இவர்கள் வயல் என்றால் என்ன; கண்ணி என்றால்என்ன; என்றுகூடத் தெரியாதவர்களாகி வீட்டில் மன்னிமார்களோடு சண்டையிட்டு எங்கேயாவது ரூ 7½ சம்பளத்துக்குக்கூட வழியற்றவர்களாகிப் பரிதபிக்கிறார்கள். இம்மட்டோ? இவர்கள் பரிதாப நிலைமை; படிக்குங்காரணத்தால் இவர்கள் பால்யத்திலேயே பெண் வீட்டுக்காரர்களால் விலை கொடுத்து வாங்கப்பட்டு இவர்களுக்குக் கலியாணமாகி இவர்களின் பத்தினிமார்கள் ஏற்கனவே புஷ்பவதிகளாகி இப்பெண்களின் புக்ககத்துப்பேர்கள் இப்பெண்கள் இத்தனை பணம், இத்தனை நகை, இத்தனைப் பாத்திரங்களோடு கொணர்ந்துவிடப்படவேண்டும் என்று அதிகரித்துக் கேட்டுக்கொண்டிருக்கவும் இப்பையன்களின் வேட்டகத்துக்காரர்கள் இவர்களைப் பாகத்தைப் பிரித்துக்கொண்டு பாகப்பத்திரம் ரிஜிஸ்தர்செய்துகொண்டு விலகிவந்துவிடுங்கள, அப்பொழுது பெண்ணைக் கொணர்ந்து விடுவோம் என்று எழுதும் கார்டுகளைப் பெற்றுக்கொண்டும் இவ்வித கண்ணராவியான நிலைமையில் சுமார் எண்ணூறு வாலிபர்களுக்குக்குறையாமல் இருக்கிறார்கள். ஐயோ! இவர்களின்நிற்கதி எதில் வந்து முடியுமோ தெரியவில்லை. இவர்கள் கிடக்கட்டும்.

தற்கால ஸ்நேகிதர்களின் பாந்தவ்யம் என்னவென்று பார்ப்போம். சேர்ந்து படித்த ஸ்னேகிதர்களில் பலர் பலவிதத்தொழில்களிலும், சந்தர்ப்பங்களிலும், இருக்க நேரிடும்போது ஒருவருக்கொருவர் தயையோடுகூட ஒத்தாசை செய்துக்கொள்ளாமல் ஒருவர்பேரில் ஒருவர் கோட்சொல்லியும் அவதூறுபேசியும் பொறாமையுற்றும் ஒற்றுமையற்றும் இருக்கிறார்கள். இருக்

இவர்களால் தேசத்துக்கு என்ன க்ஷேமம் கிடைக்கப் போகிறது! அதுபோகட்டும். தற்கால இல்லறதருமத்தை ஆலோசிப்போம் என்றாலோ அதுவும் நமது சீர்கெட்ட நிலைமையைக் காட்டுகிறது

## விவாகச்சீர்கேடு.

ஸ்ரீரங்கச்சந்தையில் மாடுவாங்கும்போதுகூட, அதின் பல்லைப்பிடித்துப்பார்த்து அது உயர்ந்ததுதானா என்று தெரிந்துக்கொண்டு வாங்குகிறோம். நமது பெண்ணுக்குமாப்பிள்ளைவாங்கும்போது அதுகூடஇல்லை. இத்தனை படிப்புக்கு இத்தனை ரூபாய், ஆறும்மாஸச் சீருக்கு இத்தனை ரூபாய். திரட்சிக்கு இத்தனைரூபாய், என்கிற கேவலத்துக்கு வந்துவிட்டது. நமது கல்யாணவைபவம் அதின் உயர்பாவமற்று வியாபாரச்சரக்காயினபின் நமது. வீடு எப்படிச் சாந்தமயமாயிருக்கும்! மிருகத்தன்மை பொருந்திய ஸ்திதிக்குத் தாழ்வடைந்துவிட்ட தற்காலக் கல்யாணக் கோலத்தில் பலஹீனமான ஸந்ததிகளும் அவைகளுக்கும் தாய்களுக்கும் புதிசுபுதிசு தினுஸுதினுஸான வியாதிகளும் அவர்களினிமித்தம் டாக்டரய்யாமார்களிடம் ஓடுதலுமே அதிகரித்துவிட்டன. இவ்வித நிலைமையில் இல்லறபத்தியின் பிரயத்தனங்கள் எவ்வளவு இருந்தபோதிலும் அவைகள் நமக்கு இல்லறத்தில் எப்படிச்சாந்தத்தைக்கு கொடுக்கும்.இதுவும்போகட்டும்!

## சிறுவர்கள் நடத்தை.

நமது தற்காலச்சிறுவர்கள் அவர்களின் பெற்றோர்களிடத்தில் எப்படி நடக்கிறார்கள் என்பதைப் பார்ப்போம். அவர்கள் மேற்கத்திய நாகரிகப் பழக்கத்தால் சில கெடுதல்களை மாத்திரம் கிரஹித்துக், கீழ்ப்படிதலும், மரியாதையும், வணக்கமும் குறைந்தவர்களாகி வருகிறார்கள். இப்பேர்ப்பட்ட புத்திரர்கள் விருத்தாப்பிய பெற்றோர்களின் காரியங்களில் எப்படி க்ஷமையோடு கூடியிருப்பார்கள். அக்ஞானியான ஆத்துக்காரியினால் பாதிக்கப்பட்டு தங்களைப் பெற்றுவளர்த்த அம்முதியவர்களுக்கு அவர்களின் ஜீவிதகாலத்தில் பிரியத்தோடு ஒருசேர்பால் கிட்ட உட்கார்ந்து ஆதரவா யளிக்க மனமில்லாமல் அவர்கள் செத்தபிறகு ஊருக்கொப்புவிக்கக், குங்குமப் பொட்டலத்துருப்பிள்ளைப் பொட்டலம்போல் ஆறணாவுக்குக் காலணாவுஞ்சேர்த்து ஐம்பது காவேரிஸ்தானம் தாங்கள் நம்பிக்கையற்று, அபாத்திரர்களுக்குத் தானஞ்செய்கிறார்கள்.

## நமது கேவல ஸ்திதி.

இப்படிக்கெல்லாம் கேவல ஸ்திதிக்கு வந்துவிட்ட நாம் ராஜாங்கத்தில் உயர்ந்த பதவிக்குக் கதறினால் அது கிட்டுமா? கிட்டினாலும் நமது தற்கால நிலைமையில் அது நமக்கு தக்குமா. அது தற்கால நிலைமையில் சகாதேவவாக்கியமாகிய பிறர்மனையாள் பெற்றதாய், பிறர்பொருள் எட்டிக்காய், பிறர்நிலைமை தன்னிலைமை என்னும் பாவனம் நமது ஸ்வானுபவத்தில் உணரக்கூடுமா? சகோதரர்களே! நான் நமதுதற்கால நிலைமையைப் பழிக்கிறேன் என்று எண்ணக்கூடாது. நமது கேவல ஸ்திதிக்குப் பரிதாபப்படுகிறேன். ஆனால் சில வருஷங்களுக்கு முந்தி இருந்த நிலைமைகளைவிட இப்போது பல மார்க்கங்களிலும் சீர்திருத்தமான உணர்வுகள் உண்டாகிப் பரவிவருகின்றன. படித்தவர்களின் மனது நல்லவழிகளில் பிரவர்த்திக்கச்சிந்தித்துக் கொண்டிருக்கின்றன. அவர்கள் பேச்சிலும் நல்லஅடையாளங்களும், குறிகளும்தோன்றுகின்றன. நமது ஒற்றுமைக்கும் ஐக்கிய அபிமானத்துக்கும் ஏற்றவைகளை இனிநாம் நமது காரியங்களில் திட்டமாய்க்காட்டவேண்டியவர்களாய் இருக்கிறோம்; ஆகையால் இப்பேர்ப்பட்ட தற்கால சந்தர்ப்பத்தில், நாம் எல்லோரும் நல்ல நடத்தையோடு கூடினவர்களாக ஆகவேண்டியது என்று நான் பிரார்த்திக்கிறேன்.

"தர்மம்சர"

ஸ்வதர்மானுஷ்டானமே நன்னடத்தைக்குக்காரணம். நடத்தை என்றால், குணம் "character." ஹிதம் என்று எண்ணியபடி பேசி, பேசியபடி செய்யும் ஐக்கிய பாவத்தில் திடமாய்நிற்கிறவர்களுக்கே நடத்தையோடுகூடியவர்கள் என்று பெயர். நடத்தையில்லாதவர்களாய் இருப்பதைவிட கெட்ட நடத்தைக்காரர்களாய் இருப்பதுகூட அதாவது மனதில் உள்ள கெட்ட எண்ணத்தைப்பேசி அதின்படி நடத்தலில் ஐக்கியம் ஏற்பட்டிருப்பது மற்றவர்களுக்கு நலம் எனலாம். தற்காலத்தில் நாம்பொதுவாக வெகுவாச நடத்தைய

ற்றவர்களாய் இருக்கின்ற வெகு பேர்களைப் பார்க்கின்றோம். கெட்ட நடத்தைக்காரர்களைவிடக் கேவலமாகிவிட்டார்கள். எண்ணியபடி பேசாமலும், பேசுகிறபடி காரியங்களைச் செய்யாமலும் நடந்து வருகின்றார்கள்: ஆகையால் இந்து சகோதரர்களே! இனியாவது கண்ணை விழியுங்கள். நல்லதென்றெண்ணியவைகளைப் பேசவும், நல்லதென்று பேசியவைகளைக் காரியங்களில் அனுஷ்டித்துக் காட்டிச்செய்யவும் திடமான தைரியமுடையவர்களாக ஆகுங்கள். அப்பொழுது தான் நமது தேசத்துக்கு மேன்மையும் நம்மவர்களினிடத்தில் மதிப்பும் ஏற்படும்:—"துப்பம் த்ரேதஸ்தித ஆத்மனே" என்கிற மஹாவாக்கியத்துக்கு சிருஷ்டிரக்ஷணஸம்ஹாரமென்னும் மூன்றிலும் வியாபித்திருக்கும் ஈசனுக்கு நமஸ்காரம் என்று அருத்தஞ்சொல்லுகிறார்கள். ஆனால் உண்மையில் எண்ணல், பேசுதல், அவைகளைக்காரியங்களில் வானுஸ் பலமாய்ச்செய்து காட்டுதல் என்னும் இம்மூன்றிலும் ஐக்கியமாய் நிற்கும் என்னின பொருட்டு நமஸ்காரம் என்பதே அதின் தத்துவம். அப்படியானஐக்கிய ஒற்றுமையை நம்மில் நாம் காண திடவைராக்கிய புத்தியோடுகூடியவர்களாக நாம்ஆகி அதினால்நம்நா ஆந்தமும் ஸுகமும் சந்துஷ்டியுமுடையவர்களாக ஆக நாம் எல்லோரும் பாக்கியபெறும்படி நான் மிக வணக்கமாய் மன்றாடுகிறேன். ஜெகதீசன அதற்கு அருள்புரிவாராக என்று பிரார்த்திக்கிறேன்

"மனஸ்யேக வசஸ்யேக கர்மண்யேக மஹாத்மநாம்
மனஸ்யந்யத், வசஸ்யந்யத் கர்மண்யநயத்துராத்மநாம்

மங்களானி பவந்து
ஓம் தத்ஸத்

---

## LINES IN PRAISE OF SRI KRISHNA, THE GOD OF TRUTH.

"What is Truth?"
"Look Within and Find It Out".

வெண்ணெய்திருடிக் கண்ணனை நீர் கண்டதுண்டோ சொல்லுமின்!

"உண்மையாவதுயாது?"
"உள்ளேபார்த்துணருண்மையை!"

---

[மாயாண்டிச்சித்தன் ஞானப்பாட்டு]

ஓங்காரி–The Ruling Principle of Life.

"ஓங்காரி யவள் தானே ஆங்காரி யாயினள்
ஆங்காரி யாகியே ஐவரைப் பெற்றெடுத்தாள்
ஆங்காரிய மெல்லாம் ஐவர்தந் தொழிலாம்
ஆங்கார மழிந்தாலது ஓங்கார மாமே."

1. ஓம் ஹ்ரீம் ஸ்ரீம் ஐம்

(1) ஓங்கார மாமே யுள்ளொளி விளக்கது
ஹ்ரீங்கார மாமே யின்னருட் சக்தியும்
ஸ்ரீங்கார மாமே ஷட்விம ஜகத்பாவம்
ஐங்கார மாவதும் ஆத்மதத் துவமே.

2. தத்துவ சத்துவ நித்திய தத்புருஷாத்மகன்.

(2) தத்துவ மதனுள் தத்துவ னிருப்பன்
தத்துவ மதனால் சத்துவ முண்டு
தத்துவ சத்துவ நித்திய மாமவன்
தத்புரு ஷாத்மக ஸ்வரூபி யானன்.

3. ஆத்மகம், சக்தி, தத்துவம், ஸ்வரூபம்.

(3) ஸ்வரூபி யானவன் தத்புரு ஷாத்மகன்
ஸ்வரூபி சக்தியும் ஆநந்த ரூபம்
ஸ்வரூபி தத்துவம் வாயு வதாமே,
ஸ்வரூபி தானும் சின்மயா நந்தனே.

4. ஸ்ரீகோபால கிருஷ்ணவதாரம்.

(4) சின்மயா நந்த ஜகதீசன் தானே
மின்மயா நந்த தேவகி வயிற்றில்
தன்மய சுந்தர கோபால கிருஷ்ணனாய்
மின்மய மேக வர்ணமோ டுதித்தான்.

5. அவதார நோக்கம்.

(5) உதித்தானே யன்னனு முண்மை யுணர்த்துவான்
கதித்தவம் மாமன் கொட்டத்தை யடக்குவான்
பசித்தவர் தாபத் திரியங்களைப் போக்குவான்
நசித்தஸ நாதந தர்மத்தை நாட்டுவான்.

6. அவதார மஹிமை.

(6) நாட்டுவான் அன்னனும் நாடெங்கும் புரப்பான்
காட்டுவான் உண்மையைக் காடெல்லா மெரிப்பான்
தீட்டுவான் புத்தியைஸ்தல யாத்திரை வ்யாஜத்தால்
மூட்டுவான் போரையும் மூர்க்கர்க ளழியவே!

7. அவதார தரிசனம்.

(7) அழியவே செய்குவான் ஆங்காரம் போக்குவிப்பான்
பழியெலாம் ஏற்றுத்தானே பரிகாரம் செய்துவைப்பான்
இழிவெலாம் அகத்தில்நீக்கி யின்னருள்சா தித்துவைப்பான்
கழிவெலாம் கழித்தபின்னர் கருமுகில்போ லெதிரேநிற்பான்.

8. திரோபவ அனுக்ரஹ சக்தி.

(8) நிற்பா னவனெதிரே நின்மல சித்தனானால்;
நிற்பா னவன்மறைவே நிமிஷாங் காரந்தோன்றில்;
கற்பா னவன்களவு கள்ளமனந் தனைத்திருத்த;
நற்பாம் பதைப்பிடித்துப் பிடாரனா யாட்டுவானே!

9. அனுக்ரஹோபாயம்!

(9) ஆட்டுவான் பாம்பு தன்னை யாட்டுவிப்பான் மனத்தையெல்லாம்
காட்டுவான் உண்மைதன்னைக் காயம்விட் டவனைப்பற்றில்,
மூட்டுவான் கலகத்தினை மும்மலமு மெரித்துவைப்பான்
ஓட்டுவா னுலகத்தோரைக் கூட்டமாய்ப் பசுநிறைபோல்!

10. நிக்ரஹானுக்ரஹசக்தி.

(10) பசுநிறைபோல் ஆடவரை யாட்டுவிப்பான் மாயக்கோலால்,
கொசுநிறைபோல் குறும்பினரைக் குலமறுப்பான் மாயத்தீயால்
கசுபலநீங்கக் கயவர்களைக் கட்டுவிப்பான் கர்மத்தாலே,
பசுபாசநீங்கப் பெற்றால், பக்தியுமளித் தாள்வானே!

11. ஆளும்சக்தி-ஆள்வான் மஹிமை.

(11) அளித்தாள்வான் பக்தியினால் அஹமழிந் துளங்கனிந்தால்
களித்தாள்வான் கர்மத்தாலும் நைஷ்கர்ம சித்திபெற்றால்
விளித்தாள்வான் வேதத்தாலே வித்வத்மனம் சுத்திபெற்றால்
புளித்தாள்வான் †போதத்தாலே புல்லறிவு நீங்காதாகில்.

12. "ஒழிவில் ஒடுக்கம்" இல்லார்தன்மை.

(12) புல்லறிவு நீங்காதாகில் பொறிபுலன்க ளொடுங்காதையே!
நல்லறிவு தானுதிக்கப் பொறிபுலன்க ளொடுங்கவேண்டும்!
புல்லறிவு நீங்காத புல்லியருக் கருள்பாலித்தால்,
நல்லறிவு தான்பெற்றுய்யார்! தரணியை யழிப்பாரையே!

13. "ஒழிவிலொடுக்கம்" இல்லார் செய்கை.

(13) தரணியை யழிப்பாரையே தாரகா சுரனைப்போலே!
அரணியைக் கடைந்துதானே அக்நியைப் பூஜைசெய்யார்!
பரணியைப்போ லுமையே மரணத்தீதன்னில் வீழ்வார்!
தரணியைக் காக்கவேண்டித் தயாநிதி யவனேவந்தான்.

† தற்போதத்தினால்,

### 14. "தயாநிதி" லெக்ஷணம்

(14) தயாநிதி யவனேவந்தான் தரணியைக் காக்கவேண்டி;
தயாநிதி யவனேவந்து தரணியிற் கோபாலனானான்;
தயாநிதி யவனேவந்து தர்மத்தைத்தலை யெடுக்கச்செய்தான்;
தயாநிதி யவனேதரணி மன்னர்க்குப்பய அபயமானான்.

### 15. "அடிக்குமொருகை அணைக்கு மொருகை."

(15) பயாபய மிரண்டுமானான் பாபபுண்யச் சிந்தைபோலே
பயாபய மிரண்டுமானான் தர்மாதர்ம நெறியைப்பற்றி
பயாபய மிரண்டுமாகித் துஷ்டரைக் கண்டிக்கலானான்
பயாபய மிரண்டினாலே சிஷ்டபரிபா லனமுஞ்செய்தான்.

### 16, அவதாரலீலை.

(16) சிஷ்டபரிபா லனமுஞ்செய்தான் துஷ்டநிக் கிரகமேசெய்தான்
இஷ்டபூர்த்தி யெல்லாம்செய்து சிஷ்டரைத்தன் னிஷ்டராகக்
கஷ்டபூர்த்தி யால்திருத்தி நஷ்டமெல்லா மீடேற்றி
துஷ்டர்களைச் சிந்தைகெட்டுப் போகவிட்டு லீலைசெய்தான்.

### 17. ஆத்மநிஷ்டர்க்கன்றிகாணற்கரியவன்.

(17) லீலைசெய்தான் வேலையற்றுப்-பாலையுண்டான் லீலைசெய்து
லீலைசெய்து பாலையுண்டு- வேலையற்றுத் தான்திரிந்த
வெண்ணெய்திருடிக் கண்ணனைநீர் கண்டதுண்டோ சொல்லுமின்!
கண்ணாற்கண்டதுண்டோ சொல்லுமின்! கண்டதுண்டேல்சொல்லுமின்!

### 18. கண்டதண்டர் அவனைக்காணார்.

(18) கண்டதுண்ட மானசொல்லைக் கண்டதுண்டமாகப்பேசி
கண்டதுண்ட மானவார்த்தைக் கண்டபிண்டமொவ்வாதே
கண்டதுண்ட·மாகவாயில் வந்தவற்றைச் சொல்லிக்கொண்டு
சண்டப்ர சண்டமாகக் கண்டதுண்டப் பேச்சுப்பேசும்

சண்டப்ர சண்டரே! நந்தர்குலத் தொண்டரே!
வெண்ணெய்திருடிக் கண்ணனைநீர் கண்டதுண்டோசொல்லுமின்!

ஓம் ஸ்ரீம் ஆபாலகோபவிதிதாயைநம:

ஓம் ஸ்ரீகிருஷ்ணாயநம:

# உபநிஷதார்த்ததீபிகை.

## I. *அமிருதபிந்து உபநிஷத்.

* சங்கராநந்தர் இதற்கு அமிருதபிந்து என்றும் நாராயணர் பிரஹ்மபிந்து என்றும்பெயர் சொல்லுகிறார்கள்.

ஓம் ஸ்ரீசாவித்திரியைநமஃ

மனம் சுத்தமசுத்தமென இருவகையாகச்சொல்லப்படும். அசுத்தமனம் காமங்களை சங்கல்பிக்கும். சுத்தமனம் காமமற்றது. (1)

மனமே மனிதர்களின் பந்த மோக்ஷங்களுக்குக் காரணமாகும். விஷயப்பற்றுள்ள மனம் பந்தத்திற்கும் நிர்விஷயமான மனம் முக்திக்கும் காரணமாகும். (2)

நிர்விஷயமான மனதால் மோக்ஷம் ஏற்படும் என்னும் காரணத்தால் முமூக்ஷுவானவன் எப்பொழுதும் மனதை நிர்விஷயமாகச் செய்ய வேண்டும் (3)

எக்காலம் மனம் சகல விஷயப்பற்றுக்களும் நீங்கி ஹிருதயத்தில் நிரோதிக்கப்பட்டு (a) உன்மனீபாவத்தை அடைகிறதோ அப்பொழுதே அது பரமபதமாகும். (4)

(a) "ஆத்ம பாவத்தை" என்றும்பாடமுண்டு.

ஹிருதயத்தில் க்ஷயத்தை (நாசத்தை, லயத்தை) அடைகிற வரையில் தான் மனதை நிரோதனம் செய்யவேண்டியது. இதுவே ஞானமும் தியானமுமாகும். மற்றனவெல்லாம் கிரந்தவிஸ்தாரமே. (5)

(அப்பிரஹ்மமானது) சிந்திக்கத்தக்கதுமல்ல (மனதிற் கெட்டாதபடியால்); சிந்திக்கத்தகாததுமல்ல. சிந்திக்கத்தக்கதல்ல, ஆனாலும் சிந்திக்கதகுந்ததே. (மனம்) அப்பொழுது பக்ஷபாதங்களற்ற பிரஹ்மத்தை அடையும். (6)

ஸ்வரத்தினால் (பிரணவத்தினால்) யோகத்தை (சித்தவிருத்திநிரோதத்தை) அப்பியசித்து, பிறகு ஸ்வரமற்றதை பாவிக்கவேணும். இதனால் பாவமே (சத்தே) அடையப்படுகிறது. அபாவமில்லை. (7)

குறிப்பு.—[நாராயணரின் வியாக்கியானபடி ஸ்வரம் என்பது பிரணவத்தின் அகாரஉகார மாத்திரைகள், அஸ்வரம் என்பது ஸ்வரமற்ற மகாரம் (அதாவது பிந்துவாகிய "ம்") என்னும்பொருள், அவித்தியாநாசத்தால் அபாவத்தை (அதாவது சூன்யமாகிற சுழுத்தியை) அடையக்கூடாது என்றும், பூர்ணமாகிய பாவத்தையே (அதாவது ஸத்ரூபமாகிற துரீயத்தையே) அடையவேண்டுமென்றும் சொல்லியிருக்கிறார்.

சங்கரானந்தர் பாடவித்தியாசத்தின்பேரில் பின் வருமாறு சொல்லுகிறார்:—ஸ்வரம் என்பது பிரணவத்தின் மாத்திரைகள் என்றும், அஸ்வரம் என்பது பிரணவத்தின் உட்பொருளென்றும், அஸ்வரத்தின் தியானத்தால் அபாவமாகிற (அதாவது அவித்தையின் நாசரூபமான) பாவம் அதாவது பிரஹ்மபாவம்) உண்டாகும் என்றும் கூறுகிறார்.]

அதுவே நிஷ்களமானதும் நிர்விகல்பமானதும், நிரஞ்சனமானதுமாகிய பிரஹ்மம். அப்பிரஹ்மமே நான் என்று அறிந்து சீக்கிரத்தில் பிரஹ்மத்தையே அடைகிறான். (8)

எது நிர்விகல்பமாயும், அழிவற்றதாயும், ஹேது திருஷ்டாந்த மில்லாததாயும், அப்பிரமேயமாயும், அநாதியாயும் உள்ளதோ அதை அறிந்து அறிஞன் மோக்ஷத்தையடைகிறான். (9)

அழிவுமில்லை உத்பத்தியுமில்லை, பந்தப்பட்டவனுமில்லை அப்பியாசியுமில்லை, முமூக்ஷுவுமில்லை முக்தனுமில்லை என்பதே "பரமார்த்ததை" (பரமார்த்தஸ்வபாவம், அதாவது, உண்மை.) (10)

ஜாக்கிரத், சுவப்ந, சுழுத்திகளிலும் ஆத்மா, ஏகமென்றே அறியவேண்டும். இம்மூன்று இடங்களையும் கடந்தவனுக்கு மறுபிறப்பு இல்லை. (11)

" His Royal H... ...s me to express to Mr. Swaminatha Aiyar his best thanks."— See pp. 34, 37, With

Vol. XVIII.] April & May 1910. [No. 1-2.

REGISTERED—M. 108.



லேசான காகிதப் பதிப்பு.
தனிப்பிரதி, $5\frac{1}{2}$ அணு.
பழைய பிரதி, 6 அணு.

சந்தா விலை விபரம்.
ஒரு வருஷத்திற்கு ரு. 4
ஆறு மாதத்திற்கு ,, 2-2




அறிவைப் பரவச் செய்வதற்கான

மாதாந்தரத் தமிழ்ப்பத்திரிகை.

*Devoted to practical Truth and Knowledge.*

அறிவுடையா ரெல்லா முடையாரறிவிலா
ரென்னுடைய ரேனு மிலர்:-திருக்குறள்.

A Popular New Review And Tamil Monthly, Estd. May, 1892.

கற்க கசடறக் கற்பவை கற்றபி
னிற்க வதற்குத் தக:திருக்குறள்.

ILLUSTRATING THE PRINCIPLES OF EDUCATION, PSYCHOLOGY, SELF - CULTURE & ETHICS ADAPTED EOR USE IN HOMES & SCHOOLS.

["Hitch Your Wagon to a Star"—Emerson.]

CONTENTS. Page.



(See Next Page).

அட்டவணை. பக்கம்.



(அடுத்த பக்கம் பார்க்க).

[" Our Theism is the Purification of the Human Mind "—Emerson.]

Thick Paper Edition for Patrons.) PUBLISHED BY (Minimum Subscription Rs. 5.

**The Secretary, Diffusion of Knowledge Agency**

Special Double No.] *Lalitalaya, Mylapore, Madras, S.* [Specimen Copy 10 As.

*For The Viveka Chintamani publishing Committee.*

Thin Paper Edition for the People.] *(Copyright Registered)* [Subscription Price: Yearly Rs. 4.

*"Like a spider, like the earth, and like a living creature He produces the Universe."—Sruti.*

# THE VIVEKA CHINTAMANI.

ESTABLISHED 1892.

The Oldest and the Best Tamil Monthly: Yearly Rs. 4.

Thick Paper Edition Rs. 5. in Advance.

Subscriptions registered by Volume only and cannot be discontinued in the middle of a Volume.

**EDITOR**
**C. V. Swaminatha Aiyar.**

LALITALAYA, MYLAPORE,
*Madras, S. May, 1910.*


---

# விவேகசிந்தாமணி.

வருஷ சந்தா ரூ. 4, வால்யம் கணக்காகவே சந்தா பதிவுசெய்யப்படும்.

## விவேகசிந்தாமணிக் கமிட்டி விண்ணப்பம்.

ஆரிய சகோதரர்களே ! விவேகசிந்தாமணி, இனி மாதந்தோறும் ஒழுங்காக வெளியாகி வரும். [illegible] ணை வருஷ முதல் மிகவும் அருமையான விஷயங்களெல்லாம் வெளிவரும். ஸித்தா[illegible] ஸாதநமுறை, யோகம், பக்தி, ஞானம் முதலான ஸாதநமுறைகள் வெளியிடப்படும். விவேகசிந்தாமணி யென்ற பெயர்க்கேற்றபடி இதில் விவேகத்தை விளக்கக்கூடிய அற்புத விஷயங்கள் நிறைந்திருக்கும். இக்காலத்துக்கேற்றபடி தேசாபிமானம், பாஷாஞானம், நீதிபோதம், வேதாந்தசாரம், சுதேச விதேச சரித்திரங்கள், மஹாத்மாக்களின் அமிருத வசனங்கள், பகவான் அர்ச்சுனனுக்குப் போதித்த நித்தியானுகூல ஸாதனங்கள், அப்போ தப்போது நடக்கும் விசேஷ ஸம்பவங்கள், ஆகிய இவைகள் அடங்கப்பெற்றுச் செந்தமிழ் நடையில் எழுதப்பட்டுத் தமிழ்நாடெல்லாம் ஜ்வலித்துவரும். இம் மாதாந்தப் பத்திரிகைக்கு ஒவ்வொருவரும் சந்தாதாரராகச் சேர்வதுடன் தங்கள் நேசர்களுக்கும் காட்டி அவர்களையும் வாங்கும்படிசெய்து ஆதரித்துவரக்கோருகிறோம். மனிதர்களுக்கு உய்யும்வழிகாட்டி அவர்களைக் கடைத்தேறச்செய்யும் உண்மையான ஸத்குருவைப்போல விவேகசிந்தாமணியை வாசிப்பவர்களுக்கு அது உற்றவிடத்துதவியாய் நின்று விவேகத்தை வளர்க்கும் குருவாய்த்தோற்று மென்பதிற் சிறிதும் சந்தேகமில்லை. பத்திரிகையை முழுதும் படித்துக் கைபொப்பக் காரர்களாய்ச் சேரவும், இதரர்களையும் அப்படியே சேரும்படி செய்யவும் கேட்டுக்கொள்கிறோம். இப்பத்திரிகை சென்ற பதினேழு வருஷங்களாக இடையறாது நடைபெற்று வந்து, இடையே அச்சாபீஸார் செய்த தவறுதலால் இடர்ப்பட்டு சஞ்சிகைகள் தவக்கப்பட்டாலும், அதனால் குற்றமின்றி பத்திரிகை தொடர்பிடியாய் நடந்துவர ஏற்பாடாகி 17-வது வால்யம் 12-சஞ்சிகைகளும் சரியாக முடிந்துவிட்டன.

1910ஹு ஏப்ரல் - மே முதல் 18-வது வால்யம் ஆரம்பம்.

சி. வி. ஸ்வாமிநா தய்யர்.
பத்திராசிரியர்.

எம். கே. நாராயணஸ்வாமி ஐயர், பி-ஏ., பி-எல்.
விவேகசிந்தாமணிக்கமிட்டி காரியதரிசி.